


# பொருளடக்கம்





கீலக. ஆவணி 24 - செப்டம்பர் 8



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

▶ செல்வக் களஞ்சியமே!
— படம்: பக்கிரிசாமி



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



மலர் 28 ★ இதழ் 6

# வன்முறைக்கு வெற்றியா?

செக் தலைவர்கள் !மாஸ்கோவிலிருந்து ஒரேயடியாகக் குழம்பித் திரும்பி வந்துள்ளனர். ருஷியாவுடன் விட்டுக் கொடுத்துச் சமாதானம் செய்து கொண்டதைத் தம் மக்கள் எதிர்க்கிறார்கள் என்பதை அவர்கள் புரிந்து கொண்டிருக்கின்றனர். ஆயினும் பயங்கரமான ரத்தக்களறி நாட்டில் ஏற்படாதிருக்க வேண்டும் என்பதால் மக்களை உணர்ச்சி வசப்படாதிருக்குமாறு கேட்டுக் கொள்கிறார்கள். கதைகளில் சின்னஞ் சிறுவர்கள்கூடப் பெரிய ராட்சதர்களைக் கொன்றதாகப் படிக்கிறோம். ஆனால் அது நடைமுறை உலகில் நடப்பதில்லை. இதை உணர்ந்துதான் செக் தலைவர்கள் மக்களைக் கட்டுப்பட்டிருக்கச் சொல்கிறார்கள்.

ருஷியாவின் வன்முறை தாற்காலிகமாக ஜயித்து விட்டது. ஆயினும் நீண்ட கால அடிப்படையில் பார்த்தால் கம்யூனிஸம் இது போன்ற நடவடிக்கைகளால் நசிக்கவேண்டியதுதான். 'சோவியத் முறை சோஷலிஸம்' என்பது சுதந்திரச் சிந்தனை — பேச்சு — விவாதம் இவற்றை அடக்கி ஒடுக்குவதுதான் எனில், அம்முறையின் கீழ் எந்த நாடும் இருப்பது பரிதாபம். இதுதான் சோஷலிஸ இலட்சணம் என்றாகி விட்டால் சிந்திக்கத் தெரிந்த எவருமே சோஷலிஸத்தை ஏற்க முடியாது. கீழ்த்தரமான அடிமை வாழ்வை விரும்புகிறவர்கள் மட்டுமே சோஷலிஸத்தைத் தழுவ முடியும்.

இத்தகைய சோஷலிஸக் கருத்தை எதிர்த்து செக்கோஸ்லோவேகியாவில் தோன்றிய புரட்சி கம்யூனிஸ உலகம் முழுவதிலுமே ஏற்பட்டுள்ள சிந்தனைக்கு அடையாளம்தான் எனலாம். ருஷியாவிலேயே இந்தச் சிந்தனை பகிரங்கமாக வெளிப்பட்டு விடப் போகிறதே என்ற பயத்தில்தான் சோவியத் தலைமைப் பீடம் செக்கின் மீது படையெடுத்திருக்கிறது. ஆனால் சோவியத் தலைமைப் பீடத்தாலும் இயற்கையைத் தடுத்து நிறுத்த முடியாது. வெகு காலம் இயற்கை பொறுமையாக இருந்து விட்டது. இனி அது தன்னை நிலைநாட்டிக் கொண்டே தீரும்.

மாஸ்கோவில் சுதந்திர உரிமைகளை விட்டுக் கொடுத்துச் செய்த உடன்பாட்டை செக் மக்கள் நிராகரிப்பது சர்வ நிச்சயம். ஆயினும் மிகச் சிறந்த தலைமை இல்லாவிடில் செக் மக்கள் ருஷியாவின் ராணுவ பலத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்ய முடியாது.

ருஷிய யதேச்சாதிகாரிகளை உலகம் கண்டித்திருக்கிறது. ஆனால் ஐ. நா. பாதுகாப்புச் சபையின் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாத பாரதத்தை யார் கண்டிப்பது? இந்திய மக்கள்தான் கண்டிக்க வேண்டும். ருஷியாவைக் கண்டிப்பதால் செக் நாட்டுக்கு என்ன லாபம் என்று கேட்கிறார் நமது பிரதமர். சீனம் உள்பட உலக நாடுகள் கண்டித்தது ருஷியாவின் போக்கை ஓரளவு பாதித்திருப்பதை அவர் கவனிக்கட்டும்.

இந்தியா வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாததற்குப் பலவீனம் காரணமல்லவெனில், இப்போது அறிவுக்குகந்த வகையில் நம் நாடு தீரமாக நடந்து காட்ட வேண்டும். அதாவது ருஷியா துருப்புகளை வாபஸ் பெறவும், விடுதலை பெற்ற செக் தலைவர்களிடம் பூரணமாக, வெளிப்படையாக ஆட்சி அதிகாரம் தரவும் ருஷிய சர்க்காரிடம் நம் பிரதமர் முயற்சி எடுக்க வேண்டும். அவர் நேரடியாகவோ ருஷியத் தூதரகத்தின் மூலமோ இம் முயற்சி எடுக்க வேண்டும். வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாத அவமானத்தைத் துடைக்க இதுவே வழி.

தீமைகளிலிருந்தும் சில நன்மைகள் பிறப்பதுண்டு. டுப்சேக்கு வெற்றி கிட்டாமல் ருஷியாவின் மிருக பலம் ஜயித்தாலும், அத் தீமையிலிருந்து சில நன்மைகள் விளையும். உதாரணமாக ருஷியாவிடம் நாம் கடைப்பிடிக்கும் போக்கு ஒரு நெருக்கடியாக முற்றும். இதனால் நமது கூட்டு சேராத தடஸ்தக்

கொள்கைக்கு முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டியிருக்கும். இப்படி நடந்தால் தில்லி சர்க்கார் கருத்தும் பாரத மக்கள் கருத்தும் ஒன்றாகும். அதோடு அற்புதமான முறையில் மேல்நாட்டு ஜனநாயக தேசங்களிடையே பாரதத்தின் தார்மிக அந்தஸ்து புத்துயிர் பெறும். நம்மைப்பற்றி நாமே கொள்கிற மதிப்பீடும், சுதந்திர உலகம் நமக்குத் தருகிற மதிப்பீடும் ஓங்கும். வார்ஸா உடன்படிக்கையில் நாமும் அடங்கியவர்கள் போல் இப்போது சர்க்கார் நடந்து கொண்டு விட்டது. இதற்கு மாறாக, நாம் தைரியமாக மேல் நாடுகளுடன் கெட்டியான நட்பு இணைப்புப் பெற வேண்டும். இவற்றைச் செய்ய ஸ்ரீமதி இந்திரா காந்தியால் வழிகாண முடியாவிடில், அவ்வாறு வழிகாணக் கூடியவர்களுக்கு அவர் வழி விட்டுத் தாம் விலக வேண்டும். ருஷிய ஏகாதிபத்தியத்திடம் செக்கின் சுதந்திரப் புரட்சி தோல்வி கண்ட பின்னும் பாரதம் நடுநிலைமை என்றும் கூட்டுச் சேராமை என்றும் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. ருஷியாவைச் சுற்றி வரும் உபகிரகமாவதற்கு இந்தியா விரும்பாவிடில், தானே போட்டுக் கொண்ட 'கூட்டுச் சேராமை'த் தளையை அது உடைத்தெறியத்தான் வேண்டும்.

அல்லது, முன் சொன்னது போல், உலக நாடுகளின் எதிர்ப்புச் சக்தியோடு இந்தியப் பிரதமர் தமது எதிர்ப்பையும் சேர்த்தால் ருஷியா கௌரவமாகத் தோல்வியை ஒப்புக் கொண்டு விலகலாம். அப்போது நிலைமை வேறாகும். இவ்வாறு தோல்வியை ஒப்புக் கொள்வதே கம்யூனிஸத்துக்கு ஒரு பெருமையாகும். அதேபோதில் ஸ்ரீமதி இந்திரா காந்தியும் தமது சாதுரியம், மிதப் போக்கு ஆகியவை மகத்தான வெற்றியடைந்ததாக உரிமை பாராட்டலாம்.

# வெல்க, வெல்க, வேதாந்தத் தூதுவர்!

இம்மாதம் பதினொன்றாம் தேதியன்று ஒரு மகத்தான சம்பவம் நிகழ்ந்து எழுபத்தைந்து ஆண்டுகள் நிறைகின்றன. ஹிந்து சமய வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள எவரும் 1893ம் ஆண்டு செப்டம்பர் 11ந் தேதியை மறக்க முடியாது. வேதாந்த சத்தியத்துக்கு அகில உலக விழாவாகப் பட்டாபிஷேகம் நடந்த நாள் அது. சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வ மத மகாசபை (Parliament of Religions)யில் சொல் மாரி பொழிந்து ஒரு கண்டத்தையே தம்பால் புரட்டிக் கொண்ட தினம் அது.

இம்மாதம் 15ந் தேதியன்று சிகாகோ சர்வ தேச மகாசபையின் எழுபத்தைந்தாண்டு நிறைவையொட்டி, அதே சிகாகோவில், அதே போல் நடைபெறவிருக்கும் உலக சமயங்கள் குறித்த கருத்தரங்கில் வேதாந்த வேந்தர் விவேகானந்தருடைய அடிச்சுவட்டிலேயே வந்துள்ள அடிகள் ஒருவர் பங்கு கொள்கிறார். இவ்விதம் மேலட்டையில், சர்வமத சத்தியங்களையும் நிரூபித்துக் காட்டிய பரமஹம்ஸ ராமகிருஷ்ண தேவரையும், அந்த நிரூபணத்தைப் பாரறியப் பிரகடனம் செய்த சுவாமி விவேகானந்தரையும் பின்னணியாகக் கொண்டு காட்சி தரும் சுவாமி ரங்கநாதானந்தர் அவர்கள்தான் சிகாகோ கருத்தரங்கில் கலந்து கொள்ளும் அடிகள்.

சுவாமி ரங்கநாதானந்தர் அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் பெருமதிப்புக்குகந்த மூத்த சாது சிரேஷ்டர்களில் ஒருவர். அறுபதாண்டுகளுக்கு முன் கேரளத்தில் தோன்றிய அவர் நாற்பதாண்டுகளுக்கு மேலாக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் சமூக — சமய சேவைகளில் சிறப்புப் பணி ஆற்றி வருபவர். பரமஹம்ஸ குருமகாராஜின் நேர் சீடரான சுவாமி சிவானந்தரிடம் சந்நியாச தீட்சை பெற்ற பாக்கியசாலி. வாய்ச் சொல், செயல் திறன் இரண்டிலுமே வல்லமை வாய்ந்தவர். பொதுப் பணிகளை நிர்வகிப்பதில் அபாரமான திறம் படைத்தவர். இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் வங்காளப் பஞ்சத்தின் போது அவர் கராச்சியிலிருந்து கல்கத்தாவுக்கு 40,000 மணங்கு அரிசி சேகரித்து அனுப்பியதும், கேரளத்தில் காலராக் கொடுமை மிகுந்தபோது அயராமல் நிதி சேகரித்து அனுப்பியதும், மக்கள் சேவையை மகாதேவன் பூஜையாகக் கருதும் அவரது உள்ளப் பாங்குக்கும், செயலாற்றலுக்கும் சான்றாகும்.

அற்புதமான மொழியில் உன்னதமான கருத்துக்களைப் பேருரைகளாக வழங்கி ஆயிரமாயிரமாக மக்களை நன்னெறியில் செலுத்தி வருபவர் சுவாமி ரங்கநாதானந்தர். அவரது பன்மொழி அறிவும், மொழி கடந்த அன்பு இதயமும் நாட்டில் பல பகுதிகளிலுமுள்ள ஆஸ்திகர்களைக் கவர்ந்திழுத்திருக்கிறது.

இலங்கை, ஜப்பான், தென் கிழக்காசிய நாடுகள், கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றில் விரிவாகப் பயணம் செய்து தமது விரிவுரைகளால் அந்நாட்டு அறிஞர்களை ஈர்த்தவர் சுவாமி ரங்கநாதானந்தர்.

உண்மையான சந்நியாசிக்குரிய அடக்கமும் எளிமையும் ஞான பக்குவமும் நிரம்பிய சுவாமிகள் விவேகானந்தரின் வாரிசாக அமெரிக்காவுக்குச் சென்றிருக்கிறார். அமெரிக்காவுக்கு ஆத்மபோதம் தந்து, அதனிடமிருந்து ஏழை இந்தியாவுக்குப் பொருளீட்டித் தந்தவர் விவேகானந்தர். இன்று அமெரிக்காவிடமிருந்து பொருள் உதவி பெறுவது மட்டும் அமோகமாகச் சர்க்காராலேயே விருத்தியாகியுள்ளது. அதற்குப் பிரதி செய்யாமல் பாரதம் இருக்கக் கூடாதல்லவா? நமது ஆன்மிகச் செல்வத்தை அமெரிக்காவுக்கு அளிப்பதற்காக ரங்கநாதானந்தர் அவர்கள் சென்றிருப்பது பெரு மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

சிகாகோ வேதாந்த சங்கத்தின் ஆதரவில் நடைபெறும் சர்வ மத கருத்தரங்கில் கலந்து கொண்ட பின் சுவாமிகள் ஓராண்டு அமெரிக்கா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து தத்துவப் பேருரைகள் நிகழ்த்த விருக்கிறார்.

அவரது அநுபவ வாக்கு அமெரிக்காவில் அமோக வரவேற்புப் பெற்று, ஆத்மவித்யை நானிலம் எங்கும் பிரகாசிப்பதற்கு ஸ்ரீ பரமஹம்ஸரையும், ஸ்ரீமத் விவேகானந்தரையும், தேவி பவதாரிணியையும் பிரார்த்திக்கிறோம்.











# அறிஞருக்கு அறுபது

சம்ஸ்கிருதத்துக்கும், சங்கீத — பரதக் கலைகளுக்கும் அளப்பரும் தொண்டாற்றி வரும் அறிஞர் டாக்டர் வே. ராகவன் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா வெகு விமரிசையாகச் சென்னையில் நடைபெற்றது. ஆகஸ்ட் 21ந் தேதி சாஸ்திரோக்தமாக ஷஷ்டியப்த பூர்த்தி விழா நடைபெற்றது. மறுநாள் மியூஸிக் அகாடெமியில் பேராசிரியருக்குப் பெரும் வரவேற்பு அளிக்கப் பட்டது. மதிப்புக்குரிய பல ஸ்தாபனங்கள் பங்கு கொண்ட இவ்விழாத் தொடக்கத்தில் ஸ்ரீமதி எம். எஸ். ஓர் அரிய சிறிய இன்னிசைக் கச்சேரி செய்தார். பற்பல நிறுவனங்கள் பேராசிரியருக்குப் பாராட்டிதழ் வழங்கின. ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் டாக்டர் ராகவனுக்கு காஞ்சி ஆசாரியாள் அநுக்கிரகித்த சால்வையைப் போர்த்தினார். தலைமை தாங்கிய ஸ்ரீ ஸி. டி. தேஷ்முக் வரவேற்புக் குழுவின் வாழ்த்திதழைப் பேராசிரியருக்கு வழங்கினார். டாக்டர் ஏ. எல். முதலியார், ராகவன் எழுதிய நூல்களின் அட்டவணையை வெளியிட்டார். டாக்டர் ஜீன் ஃபிலியோஸா அடையாறு நூல் நிலையம் இம்மணி விழாவையொட்டிப் பிரசுரித்துள்ள மலரை வெளியிட்டார். பல பிரமுகர்கள் ராகவனின் ஆற்றல்களைப் பாராட்டிப் பேசினர். ஏராளமான அன்பர்கள் விழாவுக்கு வந்திருந்து சிறப்பித்தார்கள்.

# ராஜாஜியின் கருத்துககள

ஐ. நா. பாதுகாப்புச் சபையில் ருஷியா 'வீட்டோ' பிரயோகித்ததுடன் செக் பிரச்னை முடிந்து விடாது என்று நம்புவோமாக. ஐ. நா.வின் விவாதத்துக்கான விஷயங்களிலிருந்து செக் பிரச்னையை நீக்கிவிட வேண்டும் என்று செக் தலைவர்களே கேட்டுக் கொண்டிருந்தாலும், இது ருஷியத் தலைமைப் பீடமான 'க்ரெம்ளின்' செய்த நிர்ப்பந்தத்தினால் அவர்கள் கூறுகிற கருத்து என்றே கொள்ள வேண்டும். எனவே, உலக வல்லரசுகள் 'ருஷியாவின் 'வீட்டோ'வைப் பயனற்றதாக்கும் வகையில், செக் பிரச்னையை ஐ. நா. பொதுச் சபையில் விவாதத்துக்குக் கொண்டு வரும் என நம்புவோமாக.

* * *

பிரான்ஸ் அணுகுண்டை வெடித்துச் சோதனை செய்துள்ளது. சோதனை நடந்த பிரதேசத்தில் வாழும் மக்களின் உரிமைகளை பிரான்ஸ் மீறி விட்டது. பூமிக்கு மேல் சுற்றுச் சூழலில் அணு ஆயுத சோதனை செய்யக் கூடாது என்கிற ஒப்பந்தத்தில் பிரான்ஸ் கையெழுத்திடாதது உண்மையே. ஆனால் அது காரணமாகப் பிற மக்களின் உரிமைகளை மீறிப்பது நியாயமாகிவிடாது. தங்கள் சூழல் மாசுபடாமல் இருக்க வேண்டும் என்பதில் பிரதேச மக்களுக்கு உள்ள உரிமையை, பிரான்ஸின் தற்காப்புத் திட்டம் மறுத்துவிட முடியாது. ஒப்பந்தத்தில் பிரான்ஸ் கையெழுத்திடாததும் தவறு; அதன் பின் அணு ஆயுத சோதனை செய்வதும் தவறு. முன்பு அமெரிக்காவும் ருஷியாவும் இப்படிச் செய்தனவே என்று கூறி பிரான்ஸ் தன் செயலை நியாயமாக்கிக் கொள்ள முடியாது. பிறருடைய தவறு நம்முடைய தவற்றுக்குச் சமாதானமாக முடியாது. ஐ. நா. பாதுகாப்புச் சபை இந்தப் பிரச்னையை விவாதித்து பிரான்ஸைக் கண்டிக்க வேண்டும். தனக்குப் பிடித்தமில்லாத எந்தத் தீர்மானத்தையும் ரத்து செய்கிற 'வீட்டோ' அதிகாரம் பிரான்ஸுக்கு இருப்பது உண்மை. ஆயினும் குற்றவாளிக்கு 'வீட்டோ' உரிமை இருப்பதால் நீதிபதி அளிக்கும் தீர்ப்பின் மதிப்பு குறைந்ததாகி விடாது.

* * *

பாகிஸ்தான் தன்னைக் குறித்து வெளியிடும் அடியிற்காணும் குறிப்பு நம்முடைய கவனத்துக்கு உரியதாகும் :

> பாகிஸ்தான் அரசாங்கம் தன் வருமானத்துக்குத் தக்கபடி செலவுகளை வைத்துக் கொண்டிருப்பது மட்டுமின்றி, 1967–68 பட்ஜெட்டில் செலவு போக உபரி வருமானம்கூடக் காட்டியிருக்கிறது. 1968–69 பட்ஜெட்டைச் சென்ற மாதம் தேசிய சட்டசபையில் சர்க்கார் வெளியிட்டபோது இது தெரிய வந்தது.

* * *

எல்லா மதங்களின் பிரமாண நூல்களும் உயர்ந்த நடத்தைக்கான கொள்கைகளை விதிக்கின்றன. எனவே பிரமாண நூல்களின் அடிப்படையில் மதங்களை ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்ப்பதில் ஒரு லாபமும் இல்லை. இதைவிட அனர்த்தமும், அறிவுக்குப் பொருந்தாததும் என்னவெனில், ஒரு மதக் கிரந்தம் விதிக்கும் நன்னடத்தைக் கொள்கைகளை அம்மதத்தைச் சேராத பிற மதஸ்தர்களின் நடைமுறை நடவடிக்கைகளுக்குப் பொருத்திப் பார்த்து விமரிசிப்பதுதான். ஒரு மதக் கொள்கைகளை அம்மதத்தையே சேர்ந்தோரின் நடத்தையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் சீர்திருந்த வழி பிறக்கும். பிற மதஸ்தரின் நடத்தையுடன் நம் மதத்தின் முன்னோர் வகுத்த நெறிகளை ஒப்பிட்டு, அந்த மதஸ்தர்கள் இந்த நெறிகளின் அளவுக்கு உயரவில்லை என்று கூறுவது பொய்ப் பெருமையே யாகும். மற்றவர்களைவிட நாம் உண்மையாகவே சிறந்தவர்களாக வாழ்ந்து காட்டினால் அதுவே பெருமைக்குரியது. ஆனால் நாம் எப்படி வாழ்கிறோம் என்பதைப் பாராமல் நம்மை நமது மதம் எப்படி வாழச் சொல்கிறது என்பதை மட்டுமே கவனித்து, அந்த விதிகளுடன் மற்றவர்கள் நடை முறையில் எப்படி நடக்கிறார்களோ அதை ஒப்பிட்டுப் பார்ப்பதில் பெருமைக்கு என்ன இருக்கிறது? நம் மதக் கிரந்தங்கள் விதிக்கும் கொள்கைகளை நாமே பின்பற்றி நடந்து காட்டவில்லையெனில், அந்தக் கொள்கைகளைக் குறித்தே நமக்குப் பெருமிதம் இருக்க வேண்டியதில்லை.

நான் ஏதோ புதிதாகச் சொல்வதாக நினைக்கவில்லை. எல்லோருக்கும் புலப்படும் உண்மைகளே இவை. இதனை நான் எழுதக் காரணம், நமது ரிஷிகள் நமக்காக விதித்த கொள்கைகள் பூரணத்துவம் பெற்றவையாகத் தோன்றுகின்றன என்பதற்காக மட்டும் நாம் அளவுக்கு மீறிச் செருக்கடைய வேண்டியதில்லை என்பதுதான். பிற மதஸ்தரின் பிரத்தியட்சமான நடத்தையை நம் நடத்தையோடு ஒப்பிடுவதில் பயனுண்டு; நம் மதக் கொள்கைகளைப் பிற மதக் கொள்கைகளோடு ஒப்பிட்டு ஆராய்வதில் ஏதோ நன்மை இருக்கிறது என்று நினைத்தால் அப்படி ஒப்பிட்டுப் பார்ப்பதிலும் தவறு இல்லை. ஆனால் ஒரு மதக் கொள்கைகளைப் பிற மதத்தினர் நடத்தையோடு ஒப்பிடுவது பொருத்தமற்ற காரியம்.

நாம் வாஸ்தவத்தில் என்ன செய்து காட்டுகிறோமோ, அதன் மீதுதான் பெருமை கொள்ள வேண்டும். நம் சாஸ்திரங்கள் மட்டுமின்றி, மற்றும் பல அம்சங்கள் நம்மைப் பாதித்து நாம் என்னவாக இருக்கிறோமோ, எப்படி நடக்கிறோமோ அதற்குக் காரணமாகின்றன. மற்ற மதஸ்தர்களின் நடவடிக்கைக்கும் இவ்வாறே அவர்களுடைய சமய சாஸ்திரம் மட்டுமின்றிப் புறக் காரணங்கள் உள்ளன. இதை யோசிப்போமாயின் நாம் உண்மையிலேயே பெருமைப்படுகிற நிலையில் இருக்கிறோமா? எவ்வளவு கீழ் மட்டத்துக்கு விழுந்து விட்டோம் என்பதை உண்மையான வேதனையுடன் உணர்ந்தோமாயின் பெருமையடித்துக் கொள்ள மாட்டோம்.

மணல் வீடு கட்டிச் செருக்கடையாதிருப்போம். நடைமுறை வாழ்க்கையின் முக்கியத்துவம் பற்றி விழிப்புப் பெறுவோம். அதற்கான சக்தியை அருள வேண்டுமென்று நமது ரிஷிகளைப் பிரார்த்திப்போம்.

சுவாமி ரங்கநாதாநந்தரைப் பற்றி எழுதவே ஆனந்தமாக இருக்கிறது. அவரைச் சுமார் ஐம்பதாண்டுகளாக அறிவேன்.

சுவாமி சித்தேசுவராநந்தர் என்று ஒரு பெரியவர் இருந்தார். அவரை நினைக்கையிலேயே மரியாதை உண்டாகும். அந்தப் பெரியவர் மைசூரில் ராமகிருஷ்ண ஆசிரமம் அமைக்கும்போது உதவிக்கு வந்தவர் ரங்கநாதாநந்தர். அன்றிலிருந்து நான் அவரை அறிவேன்.

ராமகிருஷ்ண மிஷனின் விதிமுறைப்படி அதன் கிளைகள் யாவும் அடிநிலையிலிருந்து ஆங்காங்கு உள்ள மக்களின் சுயமான உதவியுடனேயே நிறுவப்பட வேண்டும். இவற்றுக்குத் தலைமைப் பீடத்திலிருந்து நிதி உதவி எதிர்பார்க்கக் கூடாது. அப்போது மைசூர் ஒரு சிறிய நகரம். அவ்வள



# விவேகாநந்தரின் வழித்தோன்றல்

வாகச் செல்வச் செழிப்புள்ளது என்றும் சொல்ல முடியாது. எனவே அங்கு ராமகிருஷ்ண மடம் அமைப்பது சுலபமான காரியமல்ல. இந்தச் சிரமமான காரியத்தைச் செய்யச் சிரத்தை மிகுந்தவரும், இளைஞருமான மிஷன் அங்கத்தினர் ஒருவர் தேர்வு செய்யப்பட்டார். அவரே சுவாமி சித்தேசுவராநந்தர். அவர் கொச்சி ராஜ குடும்பத்

## பேராசிரியர் ஏ.ஆர்.வாடியா

தைச் சேர்ந்தவர். சென்னை ராஜதானிக் கல்லூரியில் பேராசிரியர் ராதாகிருஷ்ணன் அவர்களின் மாணாக்கராயிருந்தவர். மைசூருக்கு வந்த இவ்விளம் சுவாமியார் விரைவிலேயே அனைவரது பாராட்டையும் நட்பையும் பெற்றார். அவருக்கு அலுவலில் உதவி புரிந்தவர் ஈடுபாடு மிகுந்த ஒரு நண்பர். அவர் மடத்தில் பிரம்மசாரியாக எடுத்துக் கொள்ளப்பட்டிருந்தவர். அவரை நாங்கள் சங்கர மகாராஜ் என்று சொல்வோம். அவரே இன்று உலகுக்கு சுவாமி ரங்கநாதாநந்தர் என்று அறிமுகமாகியிருப்பவர்.

சுவாமி ரங்கநாதாநந்தரும் கொச்சியைச் சேர்ந்தவர். சுவாமி சித்தேசுவராநந்தரிடம் மிகுந்த ஈடுபாட்டுடன் பணி புரிந்தார். தமது நண்பரும் தலைவருமான சித்தேசுவராநந்தருக்கு எவ்வளவு சௌகரியம் செய்து தர இயலுமோ அவ்வளவும் செய்தார். 'சங்கர மகரா'ஜின் அந்த ஈடுபாடு என் மனத்தில் ஆழப் பதிந்திருக்கிறது.

மைசூரில் ராமகிருஷ்ண ஆசிரமம் ஒரு சிறிய வாடகை வீட்டில் அமைக்கப்பட்டது. வாடகையையும் அன்றாடச் செலவுகளையும் உள்ளூர் மக்களின் நன்கொடையிலிருந்தே ஈடுகட்ட வேண்டியிருந்தது. ஆசிரமத்தின் இளந் தலைவருடைய ஆகர்ஷணம் வாய்ந்த தோற்றத்தால் பல நண்பர்களும், பக்தர்களும் கவரப்பட்டு ஒன்று சேர்ந்தனர். அப்பொழுது உடல் உழைப்பின் பளுவையெல்லாம் சங்கர மகராஜே தாங்க வேண்டியிருந்தது. பிரதி மாதமும் வீடு வீடாகச் சென்று சந்தா வசூலித்தவர் அவரே. இவ்விருவரது பணிக்கு மகத்தான ஆதரவு இருந்தது. ஒருசில வருஷங்களுக்குள்ளேயே மடம் சொந்த மனைக்கட்டுக்கு மாறியது. முதலில் ஒரு சிறிய கட்டிடம் எழுப்பப்பட்டது. பிறகு ஆசிரமத்துக்கு விஜயம் செய்கிற சாதுக்களுக்காகவும், பக்தர்களுக்காகவும் ஜாகை வசதி தர இன்னொரு கட்டிடம் கட்டப்பட்டது. ஐம்பதாண்டுகளில் அங்கு மிஷன் நிலத்தில் ஒரு முழு காலனியே உருவாகியுள்ளது.

1930லிருந்து 1940க்கு உட்பட்ட காலகட்டத்தில் பாரிஸில் ஒரு வேதாந்த கேந்திரம் அமைப்பதற்கு அழைப்பு வந்தது. அதைப் பூர்த்தி செய்து பாரிஸில் மடம் நிர்மாணிக்க சுவாமி சித்தேசுவராநந்தர் தெரிவு செய்யப்பட்டார். 1952ல் டாக்டர் ராதாகிருஷ்ணனுடன் இந்த 'மடத்துக்குப் போயிருந்தேன்.

அமெரிக்கப் பயணத்துக்கு முன் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் சகாக்களிடம் விடைபெறுகிறார் சுவாமிஜி.



சுவாமிஜி ஐரோப்பிய உடை தரித்து, ஸோர்போனில் இந்தியாவின் தத்துவ சாஸ்திரம் பற்றி உபந்நியாசம் புரிவதைக் கேட்டேன். அது ஒரு மகத்தான அநுபவமாயிருந்தது. மகத்தான கௌரவமாகவும் இருந்தது. ஆனால் இதைவிட சுவாமிகள் செய்திருந்த பெரிய சாதனை பாரிஸுக்குச் சில மைல்கள் வெளியே க்ரேட்ஸ் என்ற இடத்தில் வேதாந்த கேந்திரத்தை (Centre Vedantique) அமைத்திருந்ததுதான். ஒரு பக்த குடும்பமே அவரைச் சுற்றிச் சூழ்ந்திருந்தது. என் அன்பு நண்பரும், சீடருமான சித்தேசுவரானந்தர் இவ்வுலகை விட்டுச் சென்றுவிட்டார் என்று எனக்குக் கடிதம் வந்த தினம் என் வாழ்விலேயே மிகவும் துயரமான ஒரு நாளாகும்.



சிகாகோ சர்வமத மகாசபை நடைபெற்ற கலை மாளிகை

ஆம், சித்தேசுவரானந்தரை என் சீடர் என்றுதான் சொல்லியிருக்கிறேன். அவ்வாறு சொல்லிக் கொள்ளத்தான் அவர் விரும்பினார். சுவாமி ரங்கநாதானந்தரும் அப்படியே. இவ்வாறு நாங்கள் ஆசிரியராகவும் மாணாக்கராகவும் பூண்ட உறவு எதிர்பாராத விதத்தில் உண்டாயிற்று. காலஞ்சென்ற வி. சுப்பிரமணிய அய்யர் மைசூர் ஆசிரமத்தின் பெரும் ஆதரவாளராகக் கிடைத்தது ஆசிரமத்தின் நல்லதிருஷ்டமாகும். அய்யரவர்கள் அத்வைதத்தில் ஆழ்ந்த பற்றுடையவர். காலஞ்சென்ற மைசூர் மகாராஜாவுக்குப் பாட போதகராக இருந்தவர். ராமகிருஷ்ண மடத்துச் சந்நியாசிகளுக்கு ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகாநந்தர் இவர்களின் உபதேசங்களும், வேதம், உபநிஷதம், இவை ஆகியவையும் தெரிந்திருந்தால் மட்டும் போதாது என்று கருதினார் சுப்பிரமணிய அய்யர். அத்துறவிகள் தத்துவ சாஸ்திரத்தை நன்கு படித்திருக்க வேண்டும் என்றும், தத்துவ சாஸ்திரத்தின் நவீன வளர்ச்சிகளை அறிந்திருக்கவேண்டும் என்றும் கருதினார். இதற்காக ஓர் 'ஆராய்ச்சி வட்ட'த்தைத் தோற்றுவித்து அதற்கு நிதி உதவி புரியுமாறு மைசூர் மகாராஜாவை ஊக்கினார். இதில் உலகமெங்கணும் உள்ள ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த சந்நியாசிகள் சிறு சிறு குழுக்களாக வந்து பயின்று செல்வதற்கு ஏற்பாடு செய்தார். அவர்களுக்குத் தாமே சங்கரரின் அத்வைதத்தைப் போதித்தார். இத்தனைக்கும் அய்யர் கல்லூரியில் தத்துவ சாஸ்திரம் படித்தவரல்ல. இயல்பாகவே அவருக்குத் தத்துவ சாஸ்திரத்தில் பிரக்ஞை இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். சிருங்கேரியின் புகழ் பெற்ற ஆசாரிய சுவாமிகளாகிய நரசிம்ம பாரதி அவர்களின் காலத்தில் அய்யரவர்கள் பல விடுமுறைகளைச் சிருங்கேரியில் கழித்திருக்கிறார். ஆசாரிய சுவாமிகளின் காலடியிலேயே பயின்று அத்வைத வேதாந்தத்தில் நிபுணரானார். மேற்கத்திய தத்துவ ஆராய்ச்சியாளர்களின் நூல்களையும் அவர் ஏராளமாகப் பயின்றார். முக்கியமாக கான்ட் என்பரின் தத்துவ நூல்களைப் படித்தார். தமது 'ஆராய்ச்சி வட்ட'த்தில் மைசூர் சர்வகலாசாலையின் தத்துவ சாஸ்திர ஆசிரியர்களும் ஈடுபாடு கொள்ளுமாறு செய்தார். அப்போதுதான் நான் மேற்கத்திய பரதத்துவங்களையும், நெறிகளையும், சமூக இயலையும் அந்த ஆராய்ச்சி வட்டத்தில் கற்பிக்கத் தொடங்கினேன். இவ்விதத்தில் நான் சுவாமி சித்தேசுவரானந்தருக்கும், சுவாமி ரங்கநாதானந்தருக்கும் ஆசிரியரானேன்.

சுவாமி ரங்கநாதானந்தர் அமெரிக்காவில் உரை நிகழ்த்துவதற்காக ஓராண்டுப் பயணம் செல்ல, சில நாட்களுக்கு முன் பம்பாய் வந்திருந்தார். பயணம் வெற்றி பெற என் ஆசியைக் கோருவதாக ஃபோன் செய்தார். 'சுவாமி, உங்களுக்கு எப்போதும் என் ஆசி உண்டு. ஆனால் இப்போது உங்களுக்கு அது தேவையில்லை. ஏனெனில் ஆசாரியன் என்ற முறையில் என்னை விஞ்சி விட்டீர்கள்' என்றுதான் என்னால் பதில் கூற முடிந்தது.

சுவாமி ரங்கநாதானந்தர் மெட்ரிகுலேஷன் கூடத் தேறவில்லையோ என்று ஞாபகம். ஆசிரமத்துக்கான கடும் உழைப்பினிடையே அவருக்குப் படிக்க அவகாசமும் இல்லை. ஆனால் ஆண்டவன் அவருக்கு அபாரமான அறிவை வரப்பிரசாதமாக வழங்கியிருக்கிறான். வேறெந்தத் துறவியையும் விட அவரே 'ஆராய்ச்சி வட்ட'த்தில் அதிக அக்கறை காட்டினார். அவரது தகுதியைக் கல்கத்தாவிலுள்ள ராமகிருஷ்ண மடத்தின் தலைமைப் பீடத்தினர் பூரணமாக உணர்ந்தனர். அவருக்குப் பல சிறந்த வாய்ப்புக்களை அளித்தனர். சுவாமி சித்தேசுவரானந்தர் பாரிஸுக்கு அனுப்பப்பட்டபோது சுவாமி ரங்கநாதானந்தர் ரங்கூனுக்கு அனுப்பப்பட்டார். ரங்கூன் கிளை நடத்தும் வைத்தியசாலையினால் அதற்குத் தனிப் புகழ் ஏற்பட்டுள்ளது. இந்த வைத்தியசாலையை ரங்கநாதானந்தர்தான் தொடங்கினாரா என்று எனக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆனால் அவருடைய தலைமையில் தான் அது விருத்தியடைந்து குறிப்பிடத்தக்க பெருமை பெற்றது. ஞாயிறுதோறும் கீதை பற்றியும் மற்ற வேதாந்த நூல்கள் பற்றியும் உரைகள் நிகழ்த்துவது என்ற வழக்கத்தைத்

தொடங்கியவர் ரங்கநாதாநந்தரே. அவர் ஒரு வரப்பிரசாதம் பெற்ற பேச்சாளர். தமது பேச்சைக் கேட்போரை அப்படியே மந்திரத்தில் கட்டுண்டது போலச் செய்பவர். பர்மாவில் ஜப்பானியர் புகுந்து எல்லா இந்தியர்களையும் அந்நாட்டை விட்டு ஓடச் செய்தபோது, அங்கு ரங்கநாதாநந்தர் புரிந்து வந்த நற்பணியும் துரதிருஷ்டவசமாக முடிக்கப்பட்டது. பிறகு கம்யூனிஸ ஆட்சியில் அங்கு ராமகிருஷ்ண மிஷனின் பணி பாதிக்கப்பட்ட போதிலும் வைத்திய சாலை இன்னமும் நடந்து வருகிறது. 1957ல் நான் ரங்கூன் போயிருந்தபோது அது சிறப்பாக விருத்தி யடைந்திருப்பதைக் கண்டேன்.

பர்மாவுக்குப் பிறகு சுவாமி ரங்கநாதாநந்தர் கராச்சி ராமகிருஷ்ண மடத்தில் நியமிக்கப்பட்டார். அங்கு அவர் ஓர் அருமையான நூலகம் அமைத்தார். அவரது ஞாயிற்றுக்கிழமைப் பிரசங்கங்கள் ஆயிரக் கணக்கான மக்களை ஈர்த்தன. இவர்கள் எல்லா சாதி மதங்களையும் சேர்ந்தவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது. ஆயின் மீண்டும் அவரைத் தொடர்ந்து வந்தது துரதிருஷ்டம். பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்ட பின் கசப்புணர்ச்சியும், மதத் துவேஷமும் மூண்டதால் அவர் கராச்சியில் செய்து வந்த பணியை விட்டுப் புறப்படவேண்டியதாயிற்று.

அதன் பின் அவரது சேவைக்கு இலக்காய் அமைந்தது தில்லியிலுள்ள ராமகிருஷ்ண ஆசிரமமாகும். அங்கு நூல் நிலையத்தையும் வாசகசாலையையும் விருத்தி செய்தார். ஓர் அருமையான மன்றம் அமைத்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அழகான ஆலயமும் எழுப்பினார். ஆனால்இவற்றை விட அவரது உண்மையான பணி அவர் ஞாயிற்றுக்கிழமைகளில் செய்த பிரசங்கங்களேயாகும். வாரந்தோறும் நடைபெற்ற இவ்வுரைகளுக்கு ஆயிரக் கணக்கான மக்கள் இடைவிடாமல் வந்தார்கள். தில்லி ஆசிரமத்தை நல்ல நிலைக்குக் கொண்டு வந்து உருவாக்கிய பின் அவரிடம் கல்கத்தா கோல் பார்க்கில் பிரம்மாண்டமாக நிர்மாணிக்கப்பட்ட ராமகிருஷ்ண கலாசார நிலையத்தின் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. சுவாமிஜியின் சொல்லாற்றல் மிகுந்த பேச்சுக்களைக் கேட்க வந்தவர்கள் நிலையத்தின் விஸ்தாரமான மன்றத்தை நிறைத்தனர். அவர் கல்கத்தாவில் இருக்கையில் தில்லி கல்வி மந்திராலயத்தினர் அவரை ஐரோப்பிய நாடுகளில்—குறிப்பாக, கிழக்கு ஐரோப்பிய நாடுகளில்—கலாசாரப் பயணம் செய்ய அனுப்பினர். தனிப்பட்ட முறையில் அவர் சென்றவிடமெல்லாம் சிறப்புப் பெற்றார் என்று சொல்ல வேண்டியதில்லை. அதோடு, கடவுள் என்ற கருத்தே அழிக்கப்பட்டு விட்ட நாடுகளில் அவரது விஜயத்தினால் சிறிதேனும் ஆத்மிகப் பயன் ஏற்பட்டிருக்கும் என்றும் நம்பலாம்.

இப்போது இன்னோர் அழைப்பு அவரை அமெரிக்காவுக்கு இட்டுச் சென்றிருக்கிறது. எழுபது ஆண்டுகளுக்கும் முன்பு அமெரிக்காவில் சுவாமி விவேகாநந்தரின் குரலைக் கேட்ட தலைமுறை இன்று மறைந்து போயிருக்கும். குருநாதனின் அருளால் ஆத்மப் பிரகாசம் பெற்று, குருநாதனின் உபதேசத்தை எழுத்தாலும் பேச்சாலும் நமது காலத்தவருக்கு வழங்கும் வரப்பிரசாதம் பெற்றுள்ள சுவாமி ரங்கநாதாநந்தரின் உரைகளைக் கேட்கும் வாய்ப்பு இன்றைய அமெரிக்கருக்குக் கிடைத்துள்ளது. ஏற்கனவே கல்கத்தா சர்வகலாசாலை, பம்பாயில் உள்ள டாடா சமூக இயல் நிலையம் ஆகியவற்றின் பட்டமளிப்பு விழாக்களில் பேருரை நிகழ்த்தும் கௌரவத்தைப் பெற்றவர் சுவாமி ரங்கநாதாநந்தர். அடுத்து வரும் மாதங்களில் இதுபோன்ற வாய்ப்புக்கள் அவருக்கு அமெரிக்காவில் ஏராளமாகக் கிடைக்கும்.



சிகாகோ சர்வமத மகாசபை மேடையில் சுவாமி விவேகாநந்தர்

இன்று நான் அவருக்களிக்கும் மிகப் பெரிய பாராட்டு வாசகம் இதுவே: உயிர்த்துடிப்புள்ள வேதாந்தம், மறுமலர்ச்சி பெற்ற ஹிந்து மதம் ஆகியவற்றின் உபதேசத்தை மேற்கத்திய உலகில் பிரசாரம் செய்வதில் சுவாமி விவேகாநந்தருக்குப் பிறகு தோன்றியுள்ள மிகவும் சக்திவாய்ந்த குரல் சுவாமி ரங்கநாதாநந்தருடையதே.

கடைசிப் படிகளுக்காகத் திரும்புகின்ற அந்தத் திருப்பத்தை அடைந்ததும், கொஞ்சம் நின்று அண்ணாந்து நோக்கினான் ராகவன். காற்று சிறிது வேகமாக அடிக்கும் போது உயர எழும்பிப் பறக்கும் முன்றானையையும், நந்தவனத்து மலர்களின் மனோகரமான அசைவைப்போல், காற்றில் சிலுசிலுக்கும் கேசக் கற்றையையும், பொருட்படுத்தாமல் சிறிய பொம்மை மாடல்களாகத் தெரியும் சமவெளிப் பிரதேசத்துக் காட்சிகளில் கண்களைப் புதைய விட்டு நின்று கொண்டிருந்தது 'அவள்'தான் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டவுடன், அவன் திரும்பவும் மேலே படிகளில் ஏறத் தொடங்கினான்.

பாதி மலை ஏறிக் கொண்டிருக்கும்போதே அவளைத் தேடிக் கண்டு கொண்டன அவன் கண்கள். அவன் உச்சியை அடைந்த பிறகும் அவள் ஆடாமல் அசையாமல் சிலையாய் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். அது அவனுக்கு ஒன்றும் புதியதில்லை.

ஒவ்வொரு சனிக்கிழமையும் மாலையில் 'முருத மலை' முருகன் கோயிலுக்கு வர ஆரம்பித்த நாளிலிருந்து, அப்படி வரும்



# உயரத்தில் ஒரு கோபுரம்




தியாகதாசன்

பொழுதெல்லாம் ராகவன் அவளை அதே நிலையில்தான் பார்த்துக் கொண்டிருக்கிறான். கோயிலுக்குள் சென்று முருகனைத் தரிசித்து விட்டு வந்து, கோயில் முன் படிகளில் அவன் அமரும்போதும், இரும்புக் கிராதியைப் பிடித்தபடி அவள் கீழே பார்த்துக்கொண்டேயிருப்பாள். பக்கவாட்டில் அவள் முகம் திரும்பும்போது கன்னத்தில் ஓடியிருக்கும் இலேசான கண்ணீர்க் கறையைச் சிற்சில சமயங்களில் அவன் இனம் கண்டு கொண்டிருக்கிறான்.

மலர்ந்து சிரிக்கும் வண்ணப் பூக்களுடைய ரோஜாச் செடியைவிட, ஆழ்ந்த மோனத்துடன் நிற்கும் துளசிச் செடி சிலரை அதிகமாகக் கவர்வது போல் ராகவனுடைய கருத்தைக் கவர்ந்திருந்தாள் துளசி. இடைக்காலத்தில் பெண்களைப் பற்றிய அவனுடைய எண்ண ஓட்டங்கள் திசை திரும்பிய பிறகு, பொதுவாக அவன் பெண்களைக் கண்டாலே ஒதுங்கிப் போய் விடுவான்.

கோயிலின் முன் படிகளில் வந்து உட்கார்ந்த ராகவன், பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். 'இன்று எப்படியும் அவளுடன் பேசிவிட வேண்டும்' என்ற முடிவுடன் அவன் மெல்ல எழுந்தான். நடந்து சென்று, அவளுக்குச் சற்றுத் தள்ளி, அவளைப் போலவே இரும்புக் கிராதியைப் பிடித்தபடி கீழே பார்க்கத் தொடங்கினான். அவன் நின்று கொண்டிருந்த இடத்துக்கு முப்பதடி கீழே, மலையில் புதிதாகப் போடப்பட்ட சாலையின் முடிவில், வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த பல வண்ணக் கார்களின் மேல் பகுதியையும், பெரிதாகத் தொடங்கி, வளைந்து வளைந்து கீழே செல்லச் செல்லச் சிவப்புக் கோடாகத் தெரியும் செம்மண் சாலையின் அழகையும் அவன் மிகவும் ரசித்தான். இடையிடையே அவள் கவனம் தன் பேரில் திரும்புகிறதா என்பதை அவன் கண்கள் கவனித்துக் கொண்டிருந்தன.




''உங்க சிந்தனையைக் கலைப்பதற்கு மன்னிக்கணும்.'' வெகு அருகில் ஒலித்த அந்தக் கம்பீரமான குரலின் ஓசையில் சட்டென்று திரும்பிப் பார்த்தாள் துளசி. அந்தரங்கத்துடன் மானசீகமாக உரையாடிக் கொண்டிருந்த நேரத்தில், எதிர்பாராத அந்தக் குறுக்கீட்டை அவள் விரும்பவில்லை என்பதை அந்தி வானமாய்ச் சிவந்து சிணுங்கிய முகம் பிரதிபலித்தது. அவன் அதைப் பொருட்படுத்தவில்லை.

''மூணு மாசத்துக்கும் மேல், ஒவ்வொரு சனிக்கிழமையும் மாலை நேரத்தில், இங்கே உங்களைப் பார்க்கிறதைத் தவிர, வேறு அறிமுகமில்லாத நிலையில் உங்ககிட்ட நான் பேச வர்றது உங்களுக்குத் தவறாகப் படலாம்.'' ஏதோ ஒன்றுக்கு முன்னுரையாய் ராகவன் இழுத்து நிறுத்தினான். கோவில் மணி ஓசையாய் ஒலிக்கும் அந்தக் குரல் துளசிக்குப் பிடித்திருந்தது. தன் சிந்தனைகளிலிருந்து விடுபட முடிந்த சிற்சில நாட்களில், அவனை அங்கே பார்த்திருப்பதை அவளால் நினைவுக்குக் கொண்டுவர முடிந்தது.

''இதை நீங்க படிக்கணும்னு விருப்பப்படறேன்.'' அது அவளுக்குக் கட்டளையைப் போலவும் இருந்தது; வேண்டுகோள் போலவும் இருந்தது. ராகவன், தன் பையில் இருந்து எடுத்து நீட்டிய வாரப் பத்திரிகையை ஏறிட்டுப் பார்த்தாள் துளசி. வழக்கமாகப் படிக்கிற அந்தப் பத்திரிகையில் அவன் கட்டிக் காட்டிய கதை அவள் ஏற்கனவே படித்ததுதான்.

அந்தக் கதையைத் துளசி படித்தபோது, பெரிதும் ஆச்சரியமும், கோபமும் அடைந்தாள். அதில் தன்னையே நேரில் கண்டு, யாரோ வர்ணித்திருப்பதாக அவள் உணர்ந்தாள். அவள் கோபம் அதைப் பற்றிக்கூட இல்லை. காதலில் தோல்வியுற்ற ஒரு பெண்ணின் துன்பத்தை மையமாக வைத்து அந்தக் கதை பின்னப்பட்டிருந்ததுதான் அவளுக்குப் பிடிக்கவில்லை.

அந்தக் கதையைத் தன்னைப் படிக்கும்படி அவன் ஏன் சொல்ல வேண்டும் என்று அவளுக்குப் புரியவில்லை. ஒருவேளை அதில் தன்னையே வர்ணித்திருப்பதாக அவள் உணர்ந்ததை அவனும் உணர்ந்து சொல்ல வருகிறானோ! இல்லை, அதே வகையில் தானும் துன்புறுவதாக நினைத்துத் தனக்கு வழிகாட்டும் வகையில் அதைப் படிக்கச் சொல்கிறானோ! அவளுக்கு விளங்கவில்லை. எதுவானாலும் அவனுடைய அந்த வகையான குறுக்கீடு அவளுக்குப் பிடிக்கவில்லை.

''அதை நான் ஏற்கனவே படிச்சுட்டேன்.'' துளசியின் குரல் கடுமை கலந்து ஒலித்தது. ''அதை நான் படிக்க வேணும்னு நீங்க எதிர்பார்க்க வேண்டிய அவசியம்?'' தொடர்ச்சியாக அவள் கேள்வி சீறியது.

''அந்தக் கதையைப் பற்றி உங்க அபிப்பிராயம்?''

''அபிப்பிராயம் சொல்றதுக்கு முந்தி, என் கேள்விக்கு நீங்க பதில் சொல்லணும்னு நான் எதிர்பார்க்கிறேன்.''

ராகவன் நீண்ட பெருமூச்சு விட்டான். ''கஷ்டப்படறவங்களைப் பார்க்கிறப்ப நம்ம மனசிலே ஓர் இரக்கம் உண்டாகுதே, அது தான் நீங்க இதைப் படிக்கணும்னு நான் எதிர்பார்க்கிற அவசியத்தை ஏற்படுத்திச்சு. ஒரு காலத்திலே நான் எவ்வளவோ கஷ்டப் பட்டேன்; கவலைப்பட்டேன். எவ்வளவோ அழுதேன். ஆனால் கொஞ்ச நாள் கழிச்சுத் தான் நான் தெரிஞ்சுக்கிட்டேன்: நான் அவ்வளவு கவலைப்பட்டிருக்க வேண்டியதில்லை, அழுதிருக்க வேண்டியதில்லைன்னு.''

துளசி அவனை ஆச்சரியத்துடன் பார்த்தாள். தனக்காகக்கூடக் கவலைப்பட ஓர் ஆத்மா, அதிலும் முற்றிலும் அறிமுகமில்லாத ஒரு ஜீவன் இருப்பதை முதல் முதலாகத் தெரிந்து கொண்டபோது, அந்தப் புதிய அனுபவத்தில் அவளுடைய மனம் சிலிர்த்தது. வாடிய கொடி மழைத் தாரையின் முதல் துளி பட்டவுடன் சிலிர்க்குமே அது போல. அவனிடம் தான் அவ்வளவு கடுமையாக நடந்து கொண்டதற்காக அவள் வெட்கப் பட்டாள்.

''மன்னிக்கணும். நான் ரொம்பக் கடுமையா நடந்துக்கிட்டேன்'' — முகத்தில் இலேசான மகிழ்ச்சி பரவ அவள் சொன்னாள். அவனுடைய முக பாவத்தில் எந்த மாற்றமும் இல்லை. அவள் கடுமையாகச் சீறியபோதும் பின் முகம் மலர்ந்து குழைந்தபோதும் எதிலும் பாதிக்கப்படாதவன்போல் அவன் சலனமற்று இருந்தான்.

ஆங்காங்கு விளக்குகள் எரிய ஆரம்பித்தன. இருளில் மறைந்து வைக்கப்பட்ட ஓவியம் கொஞ்சம் கொஞ்சமாக வெளிச்சம் பரவ அழகு பெறுவது போல், கீழே திடீர் திடீரென எரிய ஆரம்பித்த விளக்குகளில் ஒவ்வொரு பகுதியாய் அழகு பெற்று ஜொலிக்க ஆரம்பித்தது கோவைமாநகரம்.

''கீழே இறங்க ஆரம்பிப்போமா?'' என்றான் ராகவன். நேரமாகிவிட்டதை உணர்ந்து அவளும் தலையாட்டினாள். படிகளில் இறங்க ஆரம்பித்த கொஞ்ச நேரம்வரை, அவன் ஒன்றும் பேசாமலே வந்தான். அது துளசிக்கு ஏமாற்றமாக இருந்தது.

''அந்தக் கதை எனக்குப் பிடிக்கவில்லை; பிடிக்கலேன்னு.... ஒருவேளை மத்தவங்களுக்குப் பிடிக்குமோ என்னவோ! ஒரு பெண் கஷ்டப்படறான்னு, அது காதல் தோல்வி ஒண்ணுலேதான் இருக்கும்னு இந்தக் கதாசிரியர்கள் நினைக்கிறாங்களே, அதுதான் எனக்குப் பிடிக்கலே.''

''இன்னைக்கு உலகத்தில், நாட்டில் இளைஞர்களையும் யுவதிகளையும் பெரிதாகப் பாதிக்கிற வியாதி, காதல் தோல்விதான். எத்தனையோ சாதிக்க வேண்டியவங்க, சின்ன வயசிலேயே இந்த வியாதியால் அடிபட்டுத் தங்களோட பலத்தை யெல்லாம் இழந்துடறாங்க. இது சமுதாயத்துக்கே பொதுவான நஷ்டம் இல்லையா! இதைத்தான் நான், என்னுடைய கதைகளில் பிரதிபலித்திருக்கிறேன்.''

ராகவனை ஒருகணம் வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள் துளசி. ''நீங்க சொல்றது உண்மைதான். ஆனால், ஒவ்வொரு இளைஞனுக்கும், கன்னிப் பெண்ணுக்கும், காதலில் அடிபட்டுத் தோல்வி யடையறதிலே தான் துன்பம் இருக்க முடியும், மற்ற வகையிலே இருக்கவே முடியாதுன்னு நினைக்கிறீங்களா?''

''அப்படி நான் சொல்ல வரலே. பொதுவாக நான் சந்திக்கிற நிறையப் பேர் அந்த வகையிலே கஷ்டப்படறவங்களா இருக்காங்க!''

ராகவனும் துளசியும் அடிவாரத்தை அடைந்தபோது ஒரு பஸ் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தது.

''கொஞ்சம் முன்னாடி வந்திருந்தால் அந்த பஸ்ஸிலேயே போயிருக்கலாம்'' என்றான் ராகவன்.

''அதனாலென்ன! உங்ககூட இன்னும் நிறையப் பேசணும்போலிருக்கு. எழுத்தாளர் ராகவனை நான் இப்படிச் சந்திப்பேன்னு எதிர் பார்க்கவேயில்லை!''

''அடுத்த பஸ் இனிமேல் எப்ப வரும்னு தெரியல்லே. நீங்க எவ்வளவு நேரம் காத்துக்கிட்டு இருப்பீங்க! பேசிக்கிட்டே இருந்ததிலே இன்னைக்கு 'லேட்'டாயிடுச்சு. வழக்கமா இந்த பஸ்ஸிலே நாம் போயிடுவோம், இல்லையா?''

''இப்ப போனதுதான் கடைசி பஸ். இனிமேல் 'வடவள்ளி' போனாத்தான் பஸ் கிடைக்கும். பேசிக்கிட்டே நடப்போம்.''

''வடவள்ளி இங்கிருந்து மூணு மைலாச்சே, ஏதாவது வண்டியிலே போயிடுவமா?''

''ஏன், நடக்கறது உங்களுக்குக் கஷ்டமா?''

''இந்த இருட்டிலே, இவ்வளவு தூரம் நடக்கப் பயப்படாத நீங்களா அப்படி மனசைத் தளர விடறீங்க!'' பேசியவாறே ராகவன் நடக்க ஆரம்பித்தான். துளசியும் அவனைத் தொடர்ந்தாள்.

''அதில்லை, உடல் கஷ்டம் எவ்வளவென்றாலும் பட்டுவிடலாம். ஆனால், மனக் கஷ்டம் தான் தாங்க முடியறதில்லை.''

''உங்க கஷ்டத்தை நான் தெரிஞ்சுக்கலாமா?'' ராகவனின் கேள்வி, துளசியின் மனத்துக்கு இதமாக இருந்தது.

''என்னை யாரும் இப்படிக் கேட்டதில்லை. நீங்கதான் முதல்.'' துளசியின் குரல் கரகரப்பாக ஒலித்தது. அந்த மென்மையான இதயத்துக்குள் ஓடும் உணர்ச்சிகளை அந்த உள்ளத்தின் நெடுநாளைய ஏக்கத்தை, அந்தக் குரல் ஒலியிலேயே உணர்ந்து கொண்டான் ராகவன்.

''என் பேரையே இன்னும் சொல்லல்லே, இல்லையா? என் பேர் துளசி. 'ஹோம் சையன்ஸ்' காலேஜிலே, 'டியூட்டரா' இருக்கேன். எனக்கு விவரம் தெரியாத முன்னாலேயே அப்பா இறந்துட்டாங்க. அதற்குப் பிறகு அம்மாதான் எனக்கு எல்லாம். அப்பா போனப்போ வசதிகுறையாமல் வாழறதுக்குப் போதுமான சொத்து, நிலமெல்லாம் வச்சிட்டுத்தான் போனாரு. ஆனால் அவர் போனப்புறம் அப்பாவோட தம்பிங்க எங்க சொத்தை நிர்வகிக்கிறதாகச் சொல்லி, கொஞ்சம் கொஞ்சமா எல்லாத்தையும் பறிச்சுக்கிட்டாங்க. அம்மாவுக்கு அவங்க சூழ்ச்சி தெரியவர்றத்துக்குள்ளே பெரும் பகுதி சொத்து போயிடுச்சு. அதுக்கப்புறம்தான் அம்மா விழிச்சிக்கிட்டாங்க. அன்றையிலிருந்து எந்த உறவையும் வீடு சேர்க்காமல், அம்மாவேதான் மிஞ்சினதை வைச்சுக் காலத்தைத் தள்ளினாங்க. அவங்க படற கஷ்டம் எனக்குத்

# அணிந்து மகிழ அழகிய ஆடை ரகங்கள்

■ உயர்ரக பின்னி ரெடிமேட் காட்டன், டெரீன்/காட்டன் ஷர்ட்டுகள் ■ பின்னி டெரீன்/காட்டன் ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்—காட்டன் ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்—காபர்டைன்ஸ்—கான்ஸல்—டிரில்கள் மற்றும் அநேக சிறந்த ரகங்கள். ■ பின்னியின் அசல் பட்டுப் புடவைகள், வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள்—ஸில்க் ஷர்ட்டிங்குகள் ■ குவாலியர் 100% டெரீன் ஸூட்டிங்குகள் ■ அசோக் 100% டெரிலின் ஷர்ட்டிங்குகள், டெரீன்/வுல் மற்றும் வுல்லன் ஸூட்டிங்குகள் ■ காம்டிரஸட் & காஜோரி பனியன்கள், ஜட்டிகள் ■ ஸோடியாக் டைகள், ஸாக்ஸ்கள்.



இந்திய ஜவுளி ரகங்களில் இணையற்றவை. எல்லாம் நிர்ணயிக்கப்பட்ட மில் விலைகளிலும், கண்ட்ரோல்ட் விலைகளிலும் கிடைக்கும்.

வேலை நேரங்கள்:-
காலை 9-30 மணி முதல் 1 மணி வரை
மாலை 3-30 மணி முதல் 8 மணி வரை

## ஸ்ரீ கிருஷ்ணா டெக்ஸ்டைல்ஸ்




2, தம்புசெட்டி தெரு மதராஸ்-1
போன்: 22222

EP-SKT-28

**காமகோடியின்**



**கருணைமொழி**

ஒருவன் கிழக்குப் பக்கமாகவும், இன்னொருவன் மேற்குப் பக்கமாகவும், மற்றொருவன் தெற்குப் பக்கமாகவும், வேறொருவன் வடக்குப் பக்கமாகவும் போய்க் கொண்டேயிருந்தார்கள். கிழக்கே போகிறவன் வங்காளக் குடாக் கடலின் கரைக்கு வந்ததும் நின்றான். மேற்கே போனவன் அரபுக் கடல் கரை சேர்ந்ததும் நின்றுவிட்டான். தெற்கே போனவன் இந்து மகா சமுத்திரத்தை அடைந்ததும் நின்றான். வடக்கே போய்க் கொண்டிருந்தவனும் கடைசியில் வட துருவ சமுத்திரக் கரையில் நின்றுவிட்டான். ஒரே சமுத்திரம்தான் இப்படி வளைந்து வளைந்து நாலு பக்கமும் சுற்றிக் கொண்டு, அந்நால்வரும் முடிவில் அடைகிற இடமாக இருக்கிறது.

முடிவில் எல்லா மதஸ்தர்களும் ஒரே இடத்துக்குத் தான் போகிறார்கள். எந்தப் பக்கமாகப் போனாலும் நீ எப்போது வந்து சேருவாய் என்று காத்துக் கொண்டிருப்பவன் ஒருவன்தான். அந்தக் கிருபா சமுத்திரம் தான் பல பேரில், பல ரூபத்தில் நாலாபக்கமும் சுற்றிக் கொண்டிருக்கிறது. நீ சிரத்தை குறையாமல், ஆரம்பித்த காரியத்தை நிறுத்தாமல், முயற்சி மாத்திரம் பண்ணிக்கொண்டே இரு. எந்த வழியாயினும் முடிவில் அவனை அடையலாம்.

தெரியக்கூடாதுன்னு, என்னைச் சின்ன வயசிலேயே ஹாஸ்டல்லே சேர்த்துட்டாங்க.

''நான் லீவிலே வீட்டுக்குப் போறப்பக்கூட அம்மாவுக்கு என்கிட்ட அன்பா நாலு வார்த்தை பேசறத்துக்கு நேரம் இருக்காது. 'ஸ்கூல் பைனல்' முடிக்கிற வரைக்கும் ஹாஸ்டல்லேயும் அன்பாப் பேசறதுக்கு யாரும் இல்லே. அங்கே எல்லாம் தானுண்டு, தன் படிப்பு உண்டு, காலையிலும், மாலையிலும் சாமி பஜனை உண்டுன்னு இருப்போம். ஒருத்தர்கூட ஒருத்தர் சரியாப் பேசிக்கக்கூட மாட்டோம். காலேஜ் வந்த பிறகு, 'ஹாஸ்டல் லைஃப்' கொஞ்சம் ஃப்ரீயா இருந்தாலும் நான் எல்லார்கிட்டேயிருந்தும் விலகித் தனியா இருந்துடுவேன்.

''அப்படி இப்படின்னு ஒரு வழியா பி. ஏ. 'லிட்டரேச்சர்' படிச்சு முடிச்சேன். பி.ஏ. முடிக்கறப்ப, அதோட படிப்பை நிறுத்திட்டு அம்மாவை உட்கார வைச்சுச் சோறு போடணும், அவங்ககிட்டேயிருந்து எத்தனையோ நாள் ஏங்கிக்கிட்டிருந்த அன்பு மொழிகளைக் கேட்கணும், அந்த அன்பிலே காலமெல்லாம் திளைக்கணும்னு எல்லாம் நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா....ஆனா....'' வார்த்தை வராமல் கேவிக்கேவி அழுதாள் துளசி.

ராகவன் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக நடந்து கொண்டிருந்தான். கொஞ்ச நேரம் கழித்துத் துளசி கேட்டாள்: ''நான் அதிகமாக உணர்ச்சி வசப்பட்டுட்டேன் இல்லையா? காலமெல்லாம் எனக்காகக் கஷ்டப்பட்ட அம்மா, நான் நல்ல நிலைக்கு வர்றப்ப, அந்தப் பலனை அனுபவிக்காமப் போயிட்டதை என்னாலே தாங்க முடியறதில்லை. அம்மா போனப்ப, உறவுக்காரங்க எல்லாம் திரும்பி வந்தாங்க. அது எனக்கு எவ்வளவோ ஆறுதலா யிருந்திச்சு. அவங்க என்கிட்டச் செலுத்தின கொஞ்சம் அன்பு எனக்கு எவ்வளவோ சந்தோஷத்தைத் தந்திச்சு. ஆனால் அவங்க அன்பு அம்மா இருந்த அந்த ஒரே ஒரு வீடு எங்க கடைசிச் சொத்து கைமாறுகிற வரைக்கும்தான் இருந்தது. அவங்க எல்லாத்தையும் எடுத்துக்கிட்டாலும், அவங்க கூட ஒருத்தியா என்னை வச்சிருந்தாங்கன்னு போதும். ஆனா, அவங்க 'படிச்ச பொண்ணு, வீட்டை எப்படியும் திரும்பி வாங்கிடுவா' என்ற எண்ணத்திலே என்னை வீட்டில் சேர்க்கவே பயந்தாங்க. எனக்கு ஒண்ணும் புடிக்கல்லே. இந்த வேலை கிடைச்ச உடனே புறப்பட்டு வந்துவிட்டேன்.'' மீண்டும் துளசியிடம் மெள்ள மெள்ள விம்மல்கள் வெடிக்க ஆரம்பித்தன.

நிலா மேலேறிக் கொண்டிருந்தது. சாலையின் இரு பக்கங்களிலும் இருந்த கரும்புச் சோலைகளும், மூங்கில் புதர்களும், பாக்கு மரங்களும், அந்த மங்கலான ஒளியில் நிழல் ஓவியங்களாகத் தெரிந்தன.

''என் கஷ்டத்தைக் கேட்டு, நீங்கள் ரொம்ப வருத்தப்படறீங்க போலிருக்கு. இந்த மாதிரி நான் யார்கிட்டேயும் பேசினதில்லே. கொஞ்ச நேரத்துக்கு முந்தித் தான் அறிமுகமான உங்ககிட்டே, நான் எப்படி இந்த மாதிரிப் பேசினேன்னு எனக்கே புரியல்லே.'' துளசியின் பேச்சில் இன்னும் அழுகை கலந்துதான் இருந்தது.

''ஒருத்தர் மேலே நமக்கு ஏற்படற நம்பிக்கைதான் நம்ம கஷ்டத்தை அவங்ககிட்டே சொல்லத் தூண்டுது. அதுக்கு அவரோட நாம காலம் காலமா பழகியிருக்கணும்கற அவசியமில்லை. முதல் தடவையா பார்க்கிறப்பகூட அந்த நம்பிக்கை ஏற்படலாம். அதிலே தவறு ஒண்ணும் இல்லே. அதிலும் அன்புக்காக நீங்க ஏங்கியிருக்கிற ஏக்கம் நியாயமானதுதான். ஒரு பெண்ணுக்கு இந்தக் கஷ்டம் அதிகம்தான். ஆனால் இப்படியே, இதே நினைவுகளோட காலமெல்லாம் துன்பப்பட்டுக்கிட்டு வாடி வதங்கணுமாங்கிறதை நாம்தான் முடிவு செஞ்சிக்கணும்.'' ராகவன் தொடர்ந்தான்:

''எங்கேதான் கஷ்டமில்லே? ஒவ்வொருத்தரும் ஏதோ ஒரு கஷ்டத்தோடுதான் வாழ்ந்துக்கிட்டிருக்காங்க. படியேறிப் போறப்ப கஷ்டமா யிருந்தாலும், மேலே போய்ச் சுவாமி தரிசனம் பண்ணறப்ப உண்டாகிற மன இன்பத்தை நினைக்கிறப்ப, அந்தப் படியேறுகிற கஷ்டத்தையே நாம் உணர்றதில்லே இல்லையா? சொல்லப்போனல் பின்னுலே அடையப்போற இன்பத்துக்காக அந்தத் துன்பத்தை நாம் விரும்பக்கூடச் செய்யறேம். இந்த மனே பாவத்தை நாம் வளர்த்துக்கிட்டோமானல் கஷ்டங்களை விரும்பவே ஆரம்பிச்சிடுவோம். அப்புறம், துன்பம்னு ஒண்ணு இருக்கா என்ன?

''இந்த அளவுக்கு மனசு பக்குவப்படாத முன்னே என் வாழ்க்கையிலே சந்திச்ச அந்தக் கஷ்டத்துக்காக நான் எவ்வளவோ அழுதேன். எப்படியெல்லாமோ துடிச்சேன். எவ்வளவோ விஷயங்களைக் கடந்து வந்துவிட்ட பிறகு இன்னைக்கு அதை நினைச்சுப் பார்க்கிறதுகூட எனக்கு அவசியமாப் படலே.

''அன்பு செலுத்தறதிலேயும் மனசைப் பறிகொடுக்கிறதிலேயும் தெளிவான சிந்தனையின் பின்னணியில் அமைந்த நியாயம் இருக்கணும். ஆனல், அது அப்போ எனக்குத் தெரியாமல் போயிருச்சு. அழகான ஒரு சின்னப் பறவை படற கஷ்டத்தைப் பார்த்து முதல்லே இரக்கப்பட்டேன். பின்னுலே, அது காதலா மாறிட்டப்ப என்னுலே தடுத்துக்க முடியல்லே. அந்தப் பறவைக்காகவே மத்த எல்லாரையும் இழந்து அநாதையானேன். அதுக்காக என் இதயத்துலே பொன்னுலான ஒரு கூண்டு செஞ்சு வச்சிருந்தேன். ஆனல் அந்தக் கூண்டுக்கு நான் கதவையே அமைக்கல்லே. அந்தப் பறவையைப் பார்க்காமல் ஒரு நாள் என்னுலே இருக்க முடியாது. அதுவும் தினம் தவருமல் அந்தக் கூண்டுக்கு வந்து போய்க்கிட்டு இருந்தது. அந்தப் பொன் கூண்டைச் சுத்தி, அழகா கனவுக் கொடிகள் படர ஆரம்பித்தன. அந்தப் பறவையை நிரந்தரமா அந்தக் கூண்டிலே நிறுத்திக்கறதுக்கான வழி வகைகளை நான் தீவிரமா மேற்கொண்டிருந்தப்போ, என் வாழ்க்கையிலே ஓர் எதிர்பாராத சரிவு ஏற்பட்டிருச்சு.

''அந்தச் சரிவைத் தன்னந் தனியா சமாளிச்சு நிக்கறப்ப, அந்தப் பறவை என் கூண்டுக்கு வர்றதை நிறுத்திட்டதை உணர்ந்தேன். எந்தச் சிறகுகளைப் பயன்படுத்தி, அது என்கிட்டப் பறந்து வருமோ, அதே சிறகுகளை விரிச்சு, அது வேறே பித்தளைக் கூண்டுகளையும், இரும்புக் கூண்டுகளையும் நாடிப் பறந்து போயிடுச்சுன்னு தெரிஞ்சப்ப, நான் துடிச்ச துடிப்பு இருக்கே... ஓ! என்ன சொல்லறது. அது ரொம்ப ரொம்ப அதிகம். அவ்வளவுதான்.

''ஒருநாள் கொஞ்சமும் எதிர்பாராத வகையிலே அது என்கிட்டேயே திரும்பி வந்தது. வந்து, சகஜமா, பொன் கூண்டைத் தேடிச்சு. ஆனல் அதனுலே உள்ளே புக முடியல்லே. வேறே பறவை அந்த இடத்தைப் பிடிச்சுட்டதோன்னு அது சந்தேகப்பட்டது. ஆனல் உண்மையிலே அந்தக் கூண்டே அங்கே இல்லே. நான்கூட அந்தப் பறவையை மன்னிச்சுத் திரும்ப ஏத்துக்கணும்னுதான் நினைச்சேன். ஆனல், இடையிலே, புனிதமான அன்

புக்கு இழைக்கப்பட்டு விட்ட துரோகத்தின் வெம்மையிலே அந்தப் பொன் கூண்டு உருகி, ஊசிகளாக என் இதயத்திலே பாய்ஞ்சிடுச் சின்னு எனக்கே பின்னுலேதான் தெரிஞ்சது.

''அந்த ஊசிகளை அகற்றி எறியறதுக்கும், மனசிலே படர்ந்துவிட்ட கனவுக் கொடிகளைப் பிடுங்கி எறியறதுக்கும் நான் ரொம்பக் கஷ்டப்பட்டேன். இன்றைக்கு அஞ்சாறு வருஷங்களுக்கு மேலே ஆயிடுச்சு. அவ கல்யாணம் பண்ணிக்கிட்டு எங்கேயோ நல்லபடியா இருக்கிறதாக் கேள்விப்பட்டேன்.''

வடவள்ளி நெருங்கிவிட்டதைச் சுற்றுப்புறங்கள் உணர்த்தின. பஸ் நிற்குமிடத்தில் இருந்த அரச மரத்தின் மேடையில் அமரும்போது துளசி கேட்டாள்: ''அதற்குப் பிறகு உங்க கல்யாணத்தைப் பத்தி நீங்க நினைக்கவேயில்லையா?''

''கனவு மயமான காதல் நினைவுகளில், ஒவ்வொரு நிமிஷத்தையும் கழிச்சுக்கிட்டிருந்த அந்த நேரத்தில், 'அவளைத் தவிர, வேறு எந்தப் பெண்ணையும் திருமணம் செஞ்சுக்கிறதில்லே'ன்னு ஓர் உறுதி எடுத்துக்கிட்டேன். பின்னுலே, 'அது' இல்லேன்னு ஆன பிறகு அந்த உறுதியை மாத்திக்கிறதுக்கு என் மனசு இடம் கொடுக்கல்லே. தாற்காலிகமான உணர்ச்சி மயக்கத்தில் செஞ்சதாயிருந்தாலும், 'உறுதிமொழி' உறுதிமொழிதான். அதை நான் காப்பாத்தித்தான் தீரணும். இப்ப, அந்த உறுதியை மாத்திக்கறதைப் பத்தி நினைக்கிறதுகூடக் கிடையாது. இந்த வாழ்க்கையே எல்லா வகையிலும் நிம்மதியாயிருக்கு. தண்ணீரிலேயே இருந்தாலும், தண்ணீர் ஒட்டாத தாமரை இலைபோல், சமூகத்தில் கலந்திருந்தாலும், சமூகத்தோட அவலங்களையும், மகிழ்ச்சியையும், ஒதுங்கி நின்னு பார்க்கத்தான் ஆசைப்படறேன்.''

பஸ் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. பஸ் ஏறுவதற்காக எழுந்து போகும்போது, ராகவன் சொன்னுன்: ''அதனுலே, நான் ஏதோ வெறுத்துப் போய்ப் பேசறதாவோ, மனம் வருத்தப்பட்டுப் பேசறதாவோ நினைச்சுட வேணும்.''

துளசி நீண்ட பெருமூச்சு விட்டாள். கிடைக்காததற்காக வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதைவிட, தன்னுடைய தனித்தன்மையையும் இழக்காமல், கிடைத்ததை வைத்துத் திருப்தி அடைகிற அவன் எவ்வளவு உயர்ந்தவன் என்ற நினைவில் அவள் மனம் நெகிழ்ந்தாள். ''உங்களுக்கும் 'லாலி ரோடு' தானே?'' டிக்கட் வாங்கும்போது எழுந்த ராகவனின் கேள்விக்கு அவள் மௌனமாகத் தலையாட்டினுள்.

புதூரையும், அதை அடுத்துள்ள விவசாய ஆராய்ச்சிப் பண்ணைகளையும், 'பொட்டானிகல் கார்டன்ஸை'யும் கடந்து பஸ் விரைந்து கொண்டிருந்தது. பழைமைக்கு எடுத்துக்காட்டாக, அரண்மனையைப் போன்ற சிவப்புக் கட்டிடங்களைக் கொண்ட விவசாயக் கல்லூரியையும், அதற்கு நேர் எதிரே, சாலையிலிருந்து உள்ளே தள்ளி, புதுமைக்கு உதாரணமாய்க் கம்பீரமாக நிற்கும் அரசினர் பொறியியற் கல்லூரி 'டவரை'யும் கடக்கும்போது, ராகவன் கொஞ்சம் பழைமை நினைவுகளில் ஒன்றினுன்.

லாலிரோட்டில் இறங்கி 'கௌலிப்ரௌன்' ரோடில் நடந்து வடகோவையை அடைந்து பிரியும்போது, துளசியிடம் தான் 'எலெக்ட்ரிக் பவர் ரிஸீவிங் ஸ்டேஷ'னில் ஜூனியர் என்ஜினியராக இருப்பதையும், அங்கேயே குவார்டர்ஸில் வசிப்பதையும் சொன்னுன் ராகவன். அடுத்த சனிக்கிழமை மாலை திரும்பவும் சந்திக்க முடியும் என்ற உறுதியோடு 'ஹோம் சையன்ஸ்' கல்லூரி ஹாஸ்டலுக்குள் நடந்தாள் துளசி.

அவளுடைய மனம் பெரிதும் உணர்ச்சிவசப்பட்டிருந்தது. எங்கிருந்தோ வந்து, தன்னைக் கேட்காமலே தன் துன்பத்தில் பங்கு கொண்டு ஆறுதலையும், அடக்கமான அறிவுரைகளையும் தன் சொந்த வாழ்க்கை எடுத்துக் காட்டோடு சர்வ சாதாரணமாகச் சொல்லிச் சென்ற ராகவனை நினைத்து அவள் பெரிதும் மனம் நெகிழ்ந்தாள்.

அடுத்த சனிக்கிழமை, அதற்கடுத்த சனிக்கிழமை என்று சனிக்கிழமைகள் கடந்து செல்லச் செல்லத் துளசியின் மதிப்பீட்டில் உயர்ந்து கொண்டே வந்தான் ராகவன். வாழ்க்கையில் ஒரு புதிய மலர்ச்சியும், பிடிப்பும் ஏற்படுவதை அவள் தெளிவாக உணர்ந்தாள். சனிக்கிழமைகளை ஆவலோடு எதிர்பார்க்கத் தொடங்கி, பின் ஏங்கத் தொடங்கி, கடைசியில் தவமிருக்கவும் தொடங்கினுள் துளசி.

அந்த இதயச் சுமையை இனிமேலும் தாங்க முடியாது என்ற நிலையில் ஒருநாள் அவன் எதிரே தலை குனிந்து, விழிகள் விரல்களைப் பார்க்கத் தயங்கித் தயங்கி, ''நானும் உங்களைப் போலவே ஓர் உறுதி...'' என்று ஆரம்பித்தவளைச் சட்டென இடைமறித்தான் ராகவன். ''துளசி உன்னுடைய மென்மையான உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தந்து, உன்னுடைய தூய்மையான ஏக்கங்களுக்கு மதிப்புத் தந்து, உன் பவித்திரமான அன்பை உணர்ந்து நடந்து கொள்ளக்கூடிய ஒருவனை உனக்காக நான் தேர்ந்தெடுத்துவிட்டேன்! என் நண்பன்; என்னுேடு 'ஜே. ஈ.'யாக இருக்கிறவன்.'' அவன் சொல்லிக் கொண்டே போனுன். ராகவனின் குரல் கோவில் மணி ஓசையாக ஒலித்துக் கொண்டேயிருந்தது.

துளசியின் கண்களிலிருந்து இரு நீர் மலர்கள் பூத்து உதிர்ந்தன. துளசி உணர்ந்து கொண்டாள். 'வாழ்க்கையில் நம்பிக்கை இழந்து நிற்கிற எத்தனையோ பேருக்கு அவன் சேவை தேவை. மலையின் உச்சியிலிருந்து எல்லோருக்கும் காட்சியளித்து, துன்பப்படுகிறவர்களின் நெஞ்சில் நம்பிக்கையையும், மறுமலர்ச்சியையும் ஏற்படுத்திக் கொண்டு, வானேங்கி 'உயரத்தில் இருக்கும் ஒரு கோபுரம்' அவன். அவனைத் தனக்கு மட்டுமே சொந்தமாக்கிக் கொள்ள எண்ணுவது, உயர்ந்து உறுதியாய் நிற்கும் மலையையும், கருணைப் பெருக்கெடுத்து, நெடும் போக்காய் ஓடும் நதியையும் தனக்கு மட்டுமே சொந்தமாக்கிக் கொள்ள எண்ணுவது போலத்தான்' என்று எண்ணினுள்.

# சிறுவர் விருந்து



தயாரிப்பு: வாண்டுமாமா

10·15·20·25·30·35·40·45·50




## ஒன்பதிலே தொண்ணூறு

இங்குள்ள படத்தில் அதன் மேலே உள்ள இலக்கங்களை ஒவ்வொரு வட்டத்தினுள்ளும் ஓர் எண்ணாக அமைக்கவேண்டும். அப்படி அமைத்த பின் ஒவ்வொரு நேர் கோட்டிலிருக்கும் மூன்று வட்டங்களிலுள்ள எண்களின் கூட்டுத் தொகை தொண்ணூறு வர வேண்டும். உங்களால் முடியுமா ?

## எந்த வழி...?

பிள்ளையார் கிளம்பி விட்டார். கையிலிருந்த புத்தகத்தைச் சுழல் காற்று பறித்துக் கொண்டு போய் விட்டது. அதை அவர் கைப் பற்றியாக வேண்டும். சரியான வழியில் சென்றால்தான் சீக்கிரமாகப் புத்தகத்தை அடையலாம். எங்கே அவருக்குக் கொஞ்சம் உதவுங்களேன்.



'A'யிலிருந்து பிரதக்ஷிணமாக 40, 15, 50, 25, 20, 45, 10, 35 நடுவில் 30

## தவளையார்!

தமிழழகன்

'கொழுகொழுத்' தவளையார்
குளத்தில்நீ ராடுகிறார்!
'வளவளா' என்றுதான்
வாய்ப்பாட்டுப் பாடுகிறார்!
'சளசளா'த் தவளையார்
சங்கீதம் முயக்கிறார்!
'அழகழகு!' என்றுதான்
அவர்கதை அளக்கிறார்!



## சிலையானாய்!

இப்படி ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொள்ளுங்கள். முன் பக்கம் குனியாமலும், கால்களை நகர்த்தாமலும் அந்த நாற்காலியிலிருந்து எழுந்திருங்கள் பார்க்கலாம். 'ப்பூ' இது தானே என்று சவால் விடாதீர்கள். தோற்றுப் போவீர்கள். யாராலும் முடியாது.




# விளையாடிப் பாருங்கள்!

அப்பா கேரம்போர்டு வாங்கித் தரவில்லை. உங்களுக்கோ கேரம் ஆட ஆசை. என்ன செய்யலாம்? இதோ உங்கள் ஆசையை ஓரளவு தீர்க்கும் இந்த விளையாட்டு. உங்கள் வீட்டில் பெரிய மேஜை இருக்கிறதா? அது வழுவழுப்பாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. சங்குப் பேப்பர் அல்லது பண்டில் கட்டும் பிரௌன் பேப்பர் (வழுவழுப்பானது) இருந்தால் அதை எடுத்து மேஜை மீது விரித்துச் சுருக்கம் இல்லாதபடி இழுத்துத் தடவி ஒரு முனையை மேஜையின் ஒரு பக்கத்தின் கீழாகக் கொண்டு போய் மடித்து டிராயிங் பின்னினால் அழுத்திக் குத்திப் பொருத்துங்கள். காகிதத்தின் மறுமுனையையும் மேஜையின் மறுபக்கத்தின் அடியில் இப்படியே பின் கொண்டு இழுத்துப் பொருத்துங்கள். பிறகு ஸ்கேலைக் கொண்டு மேலே உள்ளது போல் இரண்டு கோணங்களை—அதில் உள்ள எண்களுடன்—இரு பக்கத்திலும் வரையுங்கள். முக்கோணத்தின் முனைகள் ஒன்றையொன்று பார்த்தபடி இருக்க வேண்டும். 'முக்கோணத் தின் பீடம் மேஜை முனையிலிருந்து மூன்றங்குலம் தள்ளி இருக்க வேண்டும்.

இனி ஆட ஆரம்பிக்க வேண்டியதுதான். ஒவ்வொருவரிடமும் இரண்டு 'செக்கர்'கள் இருக்க வேண்டும். முதல்வன் தன் கறுப்புச் செக்கரை முக்கோணப் பீடத்துக்குப் பின்னால் வைத்து எதிராளியின் முக்கோணத்தை நோக்கிச் சுண்டி அடிக்க வேண்டும்—கேரம் விளையாட்டுப் போல. உங்கள் காய் எதிராளியின் முக்கோணத்தில் குறித்துள்ள இலக்கங்களில் ஏதாவதொன்றில் போய்த் தங்க வேண்டும். செக்கர் கோட்டின் மீது உட்கார்ந்தால் எண்ணிக்கை கிடையாது. அது ஏதாவது ஒரு கட்டத்தினுள் பூரணமாக உட்கார்ந்திருக்க வேணும். எந்தக் கட்டத்தில் காய் இருக்கிறதோ அதில் குறித்துள்ள எண்ணிக்கையை 'ஸ்கோர்' ஆகக் கணக்கிட வேண்டும். முக்கோணத்தின் மேல் அறையில் காய் போய் நிற்குமானால் நஷ்டம் — 10 கழித்துக் கொள்ள வேண்டும்.

ஒருவர் மாற்றி ஒருவராக ஆட வேண்டும். முதல் ஆட்டக்காரர் தன் கறுப்புச் செக்கரைச் சுண்டியதும் எதிர் ஆட்டக்காரர் தன் சிவப்புச் செக்கரைச் சுண்ட வேண்டும். முதல் ஆட்டக்காரர் மறுபடியும் தன்னுடைய இரண்டாவது கறுப்புச் செக்கரை அனுப்புவார். எதிராளி தன் கடைசி சிவப்புச் செக்கரை வீசுவார். இந்த ஆட்டத்தில் ஒரு கட்சிக்குப் பத்து ஆட்டங்கள் உண்டு. நான்கு காய்களையும் ஆடியபின் ஒவ்வொரு இன்னிங்ஸ்களிலும் ஸ்கோரைச் சரி பார்க்க வேண்டும். ஏனென்றால் நான்கு காய்களையும் அடித்த பிறகு அவை எங்கெங்கே உட்கார்ந்திருக்கின்றனவோ அதைக் கொண்டுதான் செக்கர்களின் ஸ்கோரைக் கணக்கிட முடியும். உதாரணமாக முதல் ஆட்டக்காரர் தன் காயை அடித்துப் பதினைந்தில் நிறுத்தியிருக்கிறார். அந்த எண்ணிக்கையைக் குலைக்க அதைத் தன் காயினால் அடித்து வெளியேற்றி விடலாம். நல்ல ஆட்டக்காரர், குறி தவறாதவர் எதிராளியின் எண்ணிக்கையை ஏற விடாமல் பிரச்னையாக இருப்பார். எதிராளியால் கட்டங்களிலிருந்து செக்கர் வெளியேற்றப்பட்டால் அந்தச் செக்கரைக் கொண்டு மறுபடியும் ஆடலாம்.

---



கிட்டு: நான் இன்னிக்கு ஒரு குழந்தையைப் பார்த்தேன். அதிசயம் என்ன தெரியுமா? ஒரு வாரத்திலே யானைப் பாலைக் குடித்து அது இருபது பவுண்டு எடை கூடியிருக்கு.

பட்டு: ஆச்சரியமான்னா இருக்கு! யாருடைய குழந்தை அது?

கிட்டு: யானையோட குழந்தைதான்!



சுந்து: அந்தப் பயல் கத்த மோசம். கொஞ்சம் கூட 'மேனர்ஸ்'லே கிடையாது. நான் பேசிக் கொண்டிருக்கும் போதே கொட்டாவி விடுறான்.

சாந்தி: ஐயோ, அண்ணா! ஒருவேளை அவன் ஏதாவது சொல்லணும்னு முயற்சி செய்திருக்கலாம்!

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## பதினேழாம் அத்தியாயம் ❖ திடும்பிரவேசம் ❖

இந் நாளில் கும்பகோணம் என்ற பெயரால் ஆங்கில அகராதியிலேகூட இடம் பெற்றிருக்கும் நகரம் நம்முடைய கதை நடந்த காலத்தில் குடந்தை என்றும் குடமூக்கு என்றும் வழங்கப்பட்டு வந்தது. புண்ணிய ஸ்தல மகிமையையன்றிக் 'குடந்தை ஜோதிட'ராலும் அது புகழ் பெற்றிருந்தது.

குடந்தைக்குச் சற்றுத் தூரத்தில் தென் மேற்குத் திசையில் சோழர்களின் இடைக்காலத் தலைநகரமான **பழையாறை** வானை அளாவிய அரண்மனை மாடங்களுடனும் ஆலய கோபுரங்களுடனும் கம்பீரமாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தது.

பழையாறை அரண்மனைகளில் வசித்த அரச குலத்தினர் அனைவருடைய ஜாதகங்களையும் குடந்தை ஜோதிடர் சேகரித்து வைத்திருந்தார். அப்படிச் சேகரித்து வைத்திருந்த ஜாதகங்களைப் புரட்டித்தான் கொடும்பாளூர் இளவரசி **வானதி**யின் ஜாதகத்தை அவர் கண்டெடுத்தார்.

சிறிது நேரம் ஜாதகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பிறகு ஜோதிடர் வானதியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார். திரும்ப ஜாதகத்தைப் பார்த்தார். இப்படி மாற்றி மாற்றிப் பார்த்துக் கொண்டிருந்தாரே தவிர, வாயைத் திறந்து ஒன்றும் சொல்லுகிற வழியைக் காணவில்லை.

''என்ன, ஜோசியரே! ஏதாவது சொல்லப் போகிறீரா, இல்லையா?'' என்று குந்தவை தேவி கேட்டாள்.

''தாயே! என்னத்தைச் சொல்வது? எப்படிச் சொல்வது? முன் ஒரு தடவை தற்செயலாக இந்த ஜாதகத்தை எடுத்துப் பார்த்தேன். என்னாலேயே நம்ப முடியவில்லை. இப்படியும் இருக்க முடியுமா என்று சந்தேகப்பட்டு வைத்துவிட்டேன். இப்போது இந்தப் பெண்ணின் திருமுகத்தையும் இந்த ஜாதகத்தையும் சேர்த்துப் பார்க்கும்போது, திகைக்க வேண்டியிருக்கிறது!''



இதற்கு முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். நகைச் சுவையைப்பொறுத்த மட்டில் அதைச் சிருஷ்டி செய்யும் எழுத்தாளரோ, நடிகையோ, நடிகரோ அதைப் பற்றித் தீர்மான அபிப்பி ராயத்தைக் கூற முடியாத நிலையில் இருக் கிறார்கள். ஒரு 'ஜோக்' அடிக்கிறோம். அதை 'ஜோக்' என்று நாம் நினைக்கிறோம். மற்ற வர்கள் சிரித்தால்தானே அது 'ஜோக்'! தீர்ப்பு மற்றவர்கள் கையில் இருக்கிறது. 'ஜோக்' நன்றாக இல்லை என்றால் கேட்ப வர்கள் சிரிக்காமல் இருக்கலாம். ஆனால் அதற்காக 'ஜோக்' அடித்தவரைப் பார்த்து ''என்னை முட்டாள் என்று நினைத்துக்கொண் டாயா?'' என்று வம்புக்கு இழுப்பதில்லையே!

மற்றுமொரு விஷயம். பொதுவாகப் பார்க்குமிடத்து, தமிழ்ப் படங்களின் நகைச் சுவை மற்ற மொழிப் படங்களின் நகைச் சுவையைவிட ஒரு படி மேலோங்கியிருக்கிறது என்பதுதான் என் அபிப்பிராயம். காரணம் ரசிகர்கள்தான். தமிழ் நாட்டு ரசிகர்களின் நகைச்சுவை உணர்ச்சி நன்றாக இருப்பதால் தமிழ்ப் படங்களின் நகைச்சுவையும் ஓரளவு உயர்ந்துதான் காணப்படுகிறது என்றுதான் நான் நினைக்கிறேன்.

நிற்க, கேள்வியில் கோமாளிக்கூத்து என்று குறிப்பிட்டிருக்கிறது. சார்லி சாப்ளின் முதற்கொண்டு பல நகைச்சுவை சிருஷ்டி கர்த்தாக்களும் ஓரளவு கோமாளிக் கூத்தடித்த வர்கள்தான். தெனாலிராமன் கதைகளை இன் னும் உயர்ந்த நகைச்சுவை என்று போற்று கிறோம். தெனாலிராமன் தலையில் பானையைக் கவிழ்த்துக் கொண்டது கோமாளிக் கூத்தா, இல்லையா என்பதை ரசிகர்களே கூறட்டும். விதண்டா வாதம், முட்டாள்தனமான பேச்சு, அசந்தர்ப்பமான குறுக்கீடுகள், குழப் பங்கள், வழக்கத்துக்கு விரோதமான நட வடிக்கை இப்படிப்பட்ட வழிகளில்தான் நகைச்சுவை உருவாகிறது. ஓரளவு கோமாளித் தனமும் நகைச்சுவைதான்! ஆங்கிலப் படங் களின் நகைச்சுவையை வானளாவப் புகழ் கிறோம். அவர்களுடைய ''ஸ்லாப்ஸ்டிக் காமெடி''யை ரசிக்கிறோம். அதில் இல்லாத கோமாளித்தனமா?

கடைசியாக நான் ஒரு கேள்வி கேட்கிறேன். பிரபல பத்திரிகைகளில் ஹாஸ்யத் துணுக்கு கள் வருகின்றனவே! எல்லாம் ஒரே சீராக உயர்ந்தரகமானவைதானா? சில உயர்ந்தவை. சில சாதாரணமானவை. சில மட்டமே! அதனால் பத்திரிகை அதிபர்கள் தங்கள் வாச கர்களை முட்டாள்கள் என்று எண்ணிவிட் டார்கள் என்று கூற முடியுமா?

நகைச்சுவையின் தரத்தில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். அதற்காக அநியாயமான குற்றச்சாட்டு வேண்டாம். மக்களை நம்பிப் படமெடுக்கிறார்கள் படத் தயாரிப்பாளர்கள். மக்களையே முட்டாள்கள் என்று நினைப்பார் களா? ஏதோ என் மனத்தில் பட்டதைச் சொல்லியிருக்கிறேன். நகைச்சுவையைப் பற்றிச் சகலமும் தெரிந்தவள் என்ற நினைப் பில் அல்ல! நகைச்சுவையைப் பற்றி அறிந்து கொள்ள முயலுபவள் என்ற முறையில்தான்;

பேட்டி: ''நிரைத் தருவி''

---

## தோற்றதற்குப் பரிசு!

சமீபத்தில் ரஷ்யாவில் நடைபெற்ற 600 மைல் 'மோட்டார் சைக்கிள்' பந்தயம் ஒன்றில் தோற்றவர் களுக்குப் பரிசு அளிக்கப்பட்டது.

ஆம். இப்பந்தயத்தில் 'உஸ்பெக்' நகரக்காரர் சிலர் கலந்து கொண்டு, வெகு வேகமாக முன்னணி யில் சென்று கொண்டிருந்த போது, வழியில் ஒரு பஸ் விபத்துக்குள்ளாகியிருப்பதைக் கண்டனர்.



உடனே இவர்கள் தங்கள் போட்டியைப் பற்றி மறந்து, காயம்பட்ட பிரயாணிகளுக்கு முதல்சிகிச்சை செய்து முடித்தனர். இதன்பின் இவர்கள் மீண்டும் போட்டியைத் தொடர்ந்து, வெற்றிச் சின்னத்தைத் தோல்வியோடு கடந்தபோது, வெற்றி பெற்றவரைக் காட்டிலும் இரண்டு மணி நேரம் தாமதமாகியிருந் தது. இவர்கள் பந்தயத்தில் தோற்றாலும், இவர் களது மனிதாபிமானத்தைப் பாராட்டி அவ்வூர் மக்கள் ஒரு தங்கக் கலப்பையைப் பரிசாகஅளித்தனர்.

ஆதாரம்: ''சோவியத் யூனியன்'

தகவல்: கவி சம்பத்குமார்

---

பிரிட்டிஷ் அரசர்கள் அல்லது அரசிகளின் பட்டமேற்பு விழாதான் பிரிட்டனிலேயே மிக மிகக் கோலா கலமாகக் கொண்டாடப்படும் விழா.



விழா நடப்பதற் குப் பல மாதங்க ளுக்குமுன்பிருந்தே ஒத்திகைகள் நடத் திப் பார்க்கப்படும். பட்டமேற்கப் போகும் அரசரோ, அரசியோ அந்தச் சடங்குகளைச் சிறி தும் பிழையின்றிச் செய்ய வேண்டும் என்பதற்காகவே இத்தனை ஒத்திகை களும் ஏற்பாடுகளும்.

ஒரு முறை பட்டமேற்கப் போகும் அரசர் 'வெஸ்ட் மின்ஸ்டர் ஆபி' என்னும் புகழ்மிக்க ஆலயத்தில் செய்ய வேண்டிய சடங்குகளில் தவறு செய்து விட்டார். ஆர்ச் பிஷப் அதிர்ந்தவ ராய், ''என்ன இப்படிச் செய்துவிட் டீர்கள்?'' என்று கேட்ட போது மன்னர் பதற்றத்துடன், ''அடுத்த முறை இப்படிச் செய்யமாட்டேன்'' என்றார். தகவல்: ''மலர்விழி''

இந்த நாடகம், தமிழ் நாடகங்களுக்குள் தனக்கென்று ஒரு புதிய பாதையை வகுத்துக் கொண்டு அதில் பீடு நடை போடுகிறது. மேடையில் நடிப்பதற்காகவே எழுதப்பட்டுள்ள இந்த நாடகத்தைப் பார்க்காதவர்களும்கூடப் படிக்கும்போது, நாடக பாத்திரங்கள் உயிரோடு மன அரங்கில் நடமாடுவதை உணர்வார்கள்.

பஞ்சாபில் அணைக்கட்டு ஒன்றில் வேலை செய்யப் போயிருந்த கப்புரத்தினம், சொந்த ஊரான பட்டமங்கலத்துக்குத் திரும்புகிறான். அவனுடைய தமக்கை காந்திமதி, நிறை கர்ப்பிணி, அருகிலுள்ள அம்பாசமுத்திரத்துக்கு வண்டிப் பாதை இல்லாத காரணத்தால் வைத்திய உதவி சமயத்தில் கிடைக்காமல் உயிர் துறக்க நேர்ந்ததை அறிந்து, அந்தக் கிராமத்து மக்களின் நலனுக்காக உழைக்க உறுதி பூணுகிறான். முதலில் அம்பாசமுத்திரத்துக்குப் புதிய பாதை ஒன்று அமைப்பதில் தம் கவனத்தைச் செலுத்த முயன்ற போது, இடைஞ்சல்கள் பல உருவங்களில் பாதையில் குறுக்கிடுகின்றன! ஊருக்குப் பெரிய மனிதரான சங்கரலிங்க மூப்பனார் தமது செல்வம் கொழிக்கும் கரும்புத் தோட்டத்தில் ஒரு பகுதியைப் பாதை போடுவதற்காகத் தியாகம் செய்யத் தயாராக இல்லை. ஊரிலுள்ள முஸ்லிம் சமூகத்தினர் ஒரு முஸ்லிம் பெரியாரின் சமாதி வழியாக இந்தப் பாதை போடப்படுவதைத் தீவிரமாக எதிர்க்கிறார்கள். உள்ளூர் வைத்தியர் உசேன் ஷா இந்தக் கிளர்ச்சிக்குத் தலைமை வகிக்கிறார்.

ஊர்ப் பெரியவர்கள் இரண்டுபடுவதோடு மட்டுமல்லாமல், சில இளம் உள்ளங்கள் இந்தப் பூசலினால் பாதிக்கப்படுகின்றன. உசேன்ஷாவின் பெண் மீராபியைக் காதலிக்கும் அப்துல், உசேன்ஷாவின் எதிரியான கப்புரத்தினத்தோடு சேர்ந்துவிட்டதால் காதலர்களின் பாதை கரடுமுரடாகிறது. மூப்பனாரின் பிள்ளை வரதன், கப்புரத்தினத்தின் இலட்சியப் பாதை மீது மோகம் கொண்டு தந்தையையே எதிர்க்கிறான். இந்த இரண்டு குடும்பத்தினருக்கும் இடையிலே, இரண்டு நபர்கள் அடிக்கடி வந்து போகிறார்கள். வெளிப்படையாக நட்புப் பாராட்டி நெஞ்சிலே வஞ்சத்துடன் பழகி ஊரில் பூசலை வளர்க்கும் பூசாரி ஒருவன். மற்றவர் அகமும், புறமும் ஒத்தபடி அன்பு செலுத்தும் பரம பாகவதராகிய கிராம போஸ்ட்மன் நம்மாள்வார்!



• எழுத்தில் புதுமை

கிராமத்துக்கும் அம்பாசமுத்திரத்துக்கும் நடுவில் ரோடு போடுவது பற்றி விசாரணை செய்ய அனுப்பி வைக்கப்பட்ட இஞ்சினீயருக்கு மூப்பனார் விருந்து வைத்து லஞ்சமும் கொடுக்கவே, இன்ஜினீயர் தடம் புரண்டு புதிய பாதைக்குத் திமர்த் திருப்பம் தந்து விடுகிறார்! இறுதியில் ஒரு நெருக்கடியான கட்டத்தில் பாதையின் அவசியத்தைப் பிடிவாதக்காரர்களும் உணர்கிறார்கள்.

இந்த நாடகம் தொடக்கம் முதல் முடிவு வரை சரளமான உரையாடல்கள் மூலம் தொய்வில்லாமல் கொண்டு போகப்பட்டுள்ளது. திருநெல்வேலி மாவட்டப் பேச்சை ஆசிரியர் முழுக்க முழுக்கக் கையாளாமல், முக்கியமான கட்டங்களில் மட்டும் முக்கிய பாத்திரங்களின் மூலம் அந்தக் கொச்சையைக் கையாண்டிருக்கிறார். முஸ்லிம் பாத்திரங்களைச் சித்திரிக்கும்போது அவர்கள் குணாதிசயத்தில் இம்மிகூடக் குறைவில்லாமல் நாடக ஆசிரியர் தம் வசனத்தைக் கையாண்டிருக்கிறார். இலட்சியக் கதாநாயகனை கப்புவிடம் நமக்கு அனுதாபம் ஏற்படுவது போலவே, வளம் கொழிக்கும் கரும்புத் தோட்டத்தைத் தியாகம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கும் சங்கரலிங்க மூப்பனாரிடமும் முதலில் நமக்கு அனுதாபம்



# புதிய பாதை

ஏற்படத்தான் செய்கிறது. பூசாரியின் உடுக்கடியில் மயங்கிய மூப்பனுர் மேலும் மேலும் செய்யும் பல காரியங்கள் தாம் அந்த அனுதாபத்தை அவர் இழக்கும்படி செய்துவிடுகின்றன. அப்துல், மீராபி இரண்டும் ரோமியோ ஜூலியட் அச்சில் வார்க்கப்பட்ட சோகப் பாத்திரங்கள். நல்லவேளை! ஷேக்ஸ்பியரின் அந்தப் பாத்திரங்களுக்கு ஏற்பட்ட முடிவு இவர்களுக்கு ஏற்படவில்லை.

நம்மாள்வார், தம் 'சர்வீஸி'ல் 'ராங் டெலிவரி'யே செய்தறியாத தம் பிரபாவத்தை அடிக்கடி பாடுவதோடு, வரும் போதும், போகும்போதும் பிரபந்த பாசுரம் ஒன்றைப் பாடுவதாகக் காட்டப்பட்டுள்ளது நகைச் சுவையோடு இலக்கியச் சுவையையும் ஒன்று சேர்க்கும் நல்ல முயற்சியாகும். கதாநாயகன் சுப்புரத்தினத்தின் பாத்திரம்முழுமையான உருப் பெருமல் நின்று போயிருப்பதாகவே படுகிறது. நாடகத்தின் இறுதியில் உசேன் ஷாவும் மூப்பனுரும் மனம் மாறியதற்குக் காட்டப்படும் காரணங்கள் வலு குறைந்தன. மூப்பனுர் செய்த குற்றங்களுக்கு அவரை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தண்டிக்க ஆசிரியர் விரும்பவில்லை என்று தெரிகிறது.

கவர்ச்சி சிறிதுமில்லாத 'மாடர்ன் ஆர்ட்' பாணி அட்டைச் சித்திரத்துடன் இந்த நூலைக் கொண்டு வந்த தைரியத்துக்காகவும் ஆசிரியரும் பதிப்பகத்தாரும் பாராட்டப்பட வேண்டியவரே!

தஞ்சை மாவட்டம் கோமல் கிராமத்தைச் சேர்ந்த சுவாமிநாதன் இளம் வயதிலேயே வினேபாவின் பூமிதான இயக்கத்திலும் 'யூத் காங்கிரஸ்' 'இண்டியன் டிரேட்யூனியன் காங்கிரஸ்' போன்ற இயக்கங்களிலும் ஈடுபட்டு, ராமநாதபுரம், திருநெல்வேலி, திருச்சி மதுரை மாவட்டங்கள் முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து பல பொதுக் கூட்டங்களில் பேசி, பலதரப்பட்ட மக்களோடு தொடர்பு கொள்ளும் ஒரு வாய்ப்பைப் பெற்றவர். 1953ல் இவர் எழுதிய 'இதயத்துடிப்பு' என்ற அரசியலைப் பின்னணியாகக் கொண்ட நாடகம், மதுரையில் ஒரு முறை நடிக்கப் பட்டது. அதன் பின்னர் இவர் எழுதிய 'விளக்குத் தூண்' என்ற சமூக நாடகத்தைப் படித்துப் பார்த்த ம. பொ. சி. அவர்களால் 'இந்தத் துறையில் தொடர்ந்து பாடுபடுங்கள் உங்களுக்கு வெற்றி நிச்சயம்' என்று ஊக்குவிக்கப்பட்டார் இவர்.

நாடக ஆசிரியராக மிளிர வேண்டுமென்று கனவு கண்டு கொண்டிருந்த இவர் கண்களில் 1956ல் சேவா ஸ்டேஜ் குழுவினரின் நாடகக் கல்வி நிலேயம் பற்றிய விளம்பரம் பட்டது. அவர்களோடு சேர்ந்தார். சின்னஞ்சிறு வயதிலேயே 'புதுமைப் பித்தன்' கதைகளைப் படித்துப் பண்பட்டிருந்த இவருடைய இலக்கிய ஆர்வம், சேவா ஸ்டேஜில் ஸ்ரீ பி. எஸ். ராமையாவைச் சந்தித்து அவரோடு பழகும் வாய்ப்புக் கிடைத்ததும் பலன் தரத் தொடங்கி விட்டது. நாடகத்தின் இலக்கணம், பாத்திரப் படைப்பு, சூழ்நிலைகள், கையாள வேண்டிய உத்திகள் பற்றி ஸ்ரீ ராமையாவிடம் கற்றுக் கொண்ட இவர் விரைவில் மேடை நாடகங்கள் எழுதத் தொடங்கினுர். செகாவ், இப்ஸன், ஷா போன்ற மேலை நாட்டு நாடக மேதைகளின் படைப்புக்களையும் படித்துப் பார்த்த தைரியம் துணை சேர 'புதிய பாதை', 'தில்லை நாயகம்' 'மின்னல் கோலம்' போன்ற நாடகங்களை இவர் மேடை ஏற்றினுர். 1957 முதல் 1963 வரை சேவா ஸ்டேஜின் மானேஜராகவும் பணியாற்றினுர்.

சில காலம் இயக்குநர் திலகம் ஸ்ரீ கே. எஸ். கோபால கிருஷ்ணனின் உதவியாளராக இருந்த இவர், 1967ல் ''பொன்னுன வாழ்வு'' என்ற படத்தின் வசனகர்த்தாவானுர். இப்போது ''கல்லும் கனியாகும்'' என்ற படத்தின் திரைக் கதை வசனத்தின் பொறுப்பை ஏற்றுச் செய்திருக்கிறுர்.

''இந்தப் 'புதிய பாதை' நாடகத்தின் கருத்து உங்கள் மனத்தில் எப்போது எப்படி உதித்தது?'' என்று ஸ்ரீ கோமல் சுவாமி நாதனைக் கேட்டேன்.

''பூமிதான இயக்கத்தில் சேர்ந்து பல கிராமங்களில் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது பல ஊர்களில் வண்டிப்பாதை சரியாக அமையாமல் மக்கள் கஷ்டப்படுவதை நேரில் கண்டிருக்கிறேன்.''

''கிராமங்களுக்குப் போவானேன்? சென்னை நகரிலேயே மேற்கு மாம்பலத்திலும், அசோக் நகரிலும் முக்கிய ரோடுகளைச் சேர்க்கும் பாதை சரியாக இல்லாமல் மழைக் காலத்தில் மக்கள் அவதிப் படவில்லையா?'' என்றேன்.

''மற்றென்றும் சொல்லி விடுகிறேன். 'செர்ரி ஆர்ச்சர்ட்' எழுதிய செகாவும், ரோடு போடுவதற்குத் தன் வயலிலிருந்து இடம் தர மறுத்த எனக்குத் தெரிந்த ஒரு காங்கிரஸ்காரரும்தான் இந்த என் படைப்புக்கு ஆதாரமாக இருந்தவர்கள்! ஹிந்துக்களோடு முஸ்லிம் மக்களும் ஒருமித்து வாழும் கதை யம்சம் கொண்ட இந்தப் 'புதிய பாதை' நாடகம் சென்னையிலும், பம்பாய், கல்கத்தா, திருச்சி போன்ற வெளியூர்களிலுமாக இருபது தடவை நடிக்கப்பட்டுள்ளது.''

''புதிய பாதையின் நாடகத்தில் நடித்த சேவா ஸ்டேஜ் குழுவினரின் நடிப்பைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே!'' என்றேன்.

''சொல்லவும் வேண்டுமா? முத்துராமன் சாந்தினி, அப்துல் — மீராபி காதல் ஜோடியாகவும், கோபாலகிருஷ்ணன் சுப்புரத்தினமாகவும், சந்திரசேகரன் மூப்பனுராகவும் வீராசாமி உசேன் ஷாவாகவும், முருகன் பூசாரியாகவும் மிக நன்ருக நடித்தார்கள். ஆனல் ஸ்ரீ சகஸ்ரநாமம் திவ்யப் பிரபந்தப் பாடல்களைப் பாடிக்கொண்டே போஸ்ட்மேன் நம்மாள்வாராக நடித்ததுதான் — அவர் மேடை நடிப்புக்கே சிகரமாக இருந்தது'' என்ருர் ஸ்ரீ கோமல் சுவாமிநாதன்.

வெளி மாநிலங்களிலும் இந்த நாடகத்துக்கு நல்ல பெயர். 'டைம்ஸ் ஆப் இந்தியா' உன்னதமான மையக் கருத்துக் கொண்ட நாடகம் என்று பாராட்டி எழுதியிருக்கிறது. 'ஹிதவாதா'வின் ஆசிரியரான ஸ்ரீ ஏ. டி. மணி சர்வ தேச அரங்கில் இடம் பெறும் தகுதி வாய்ந்த ஒரு நாடகத்தை எழுதியிருப்பதாகப் பாராட்டியுள்ளார். — மகரம்

**எழுத்துப் பிரசுரம், சென்னை - 5; விலை: ரூ. 3**

# இனிக்கும் நினைவுகள்

கோமகள்



## 23. பலகணி

அன்று வசந்தன் ஏனோ அதிகாலையில் விழித்துக் கொண்டான். அவன் கட்டிலுக்கருகே மற்றொரு கட்டிலில் குழலி படுத்திருந்தாள். விடியற்காலையே எழுந்து விடும் குழலி, — அன்றென்னவோ இன்னும்எழவில்லை. மேசை விளக்கின் ஒளி பொழுது விடிய விடிய மங்கிக் கொண்டே வந்தது. அதை 'டப்'பென நிறுத்திவிட்டுக் குழலியைப் பார்த்தான். கடந்த ஆறு மாதங்களாகத் தன் கூடவே வாழ்ந்து வளைய வரும் அவளைப் பற்றி அவன் அதிகமாகவே நினைக்கத் தயங்கினான். வைகறைப் பொழுதின் இனிய கனவுகளைப் போல் சில்வியாவின் நினைவும் கரைந்து தூர நின்றது. அந்தச் சின்னக் கிராமமான நெடூருக்கு அவன் வைத்திய அதிகாரியாகப் பணி புரிய வந்த நாளிலிருந்தே அவன் வாழ்வின் திசை ஒரேயடியாக மாறி விட்டது. அவன் அங்கு வந்த நிமிடத்திலிருந்தே குழலியும் அங்கு வந்து விட்டாள். அந்த எளிமையான வாழ்க்கை அவளோடும் கலந்து கொண்டுதான் ஓடிக் கொண்டிருந்தது.

சுவர்க் கடிகாரம் ஆறு முறை ஒலித்து ஓய்ந்தது. வசந்தன் மெல்லக் குழலியின் தோள்களைத் தொட்டான். வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்த குழலி வெட்கத்தோடு உடைகளைச் சீர்ப்படுத்திக் கொண்டாள். அவள் பார்வை கடிகாரத்தில் ஓடியது. பரபரப்புடன் எழுந்தாள். அவளது விநோதமான பரபரப்பைக் கண்டு வசந்தன் நகைத்தான்.

''ஏன் என்ன வந்தது? ஒரு நாளைக்கு அயர்ந்து தூங்கி விட்டால் இத்தனை அஞ்ச வேண்டுமா?''

''இல்லை; மாமா அதிகாலையில் காப்பி சாப்பிடுவார்களே. ரொம்ப நேரமாகி விட்டதே.''

''உன் மாமாவும், நீ தூங்குவதைத் தெரிந்து கொண்டுதானோ என்னவோ, இன்று இன்னும் எழக் காணோம். 'திருப்பாவை' இசையே காதில் விழவில்லை......'' என்றான் வசந்தன்.

குழலி சீப்பால் தலையைச் சீர் செய்து கொண்டு உள்ளே ஓடினாள். இந்தப் பெண்களுக்கு இப்படிக் கடமை உணர்ச்சியும், பக்தியும், தூய்மையும் எப்படித்தான் வருகின்றனவோ? எல்லா நாகரிகங்களும் நம் நாட்டில் வந்து மோதினாலும் பாரதப் பெண்களின் பொற்பு குலைந்து விடுவதில்லை. நவ பாரதம் வாழும் சக்தியே இந்த மாபெரும் பெண்மையின் தூய்மை சக்தியால்தான்.... குழலி எப்படி வளர்ந்தவள், எப்படி வாழ்ந்தவள்? செல்வச் செழிப்பில் ஒற்றை ரோஜாவாக வளைய வந்தவள், மாலையிட்டவனுக்கு மண்டியிட்டு அடிமையாகி விட்டாளே!

சரியாக மணி ஏழுக்குக் கோடரி முடிச்சுப் போட்டு, குளித்த ஈரத் தலையுடன் மணக்கும் காப்பியைக் கொண்டு வந்து வசந்தனிடம் கொடுத்தாள். ஓரக் கண்ணால் அவனை நோக்கிக் கொண்டே, ''நீ எழுந்திருக்க நேரமாகிவிட்டதால் நான் குளிக்க நேரமாகி விட்டது!'' என்று விளையாட்டாகக் குற்றம் சாட்டினான் வசந்தன்.

''இதோ நீங்கள் குளிக்க வரலாம். நாளைக்கெல்லாம் இப்படி நடக்காது'' என்று விடையளித்துவிட்டு, மற்றொரு காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டு முன்பக்கத்து வராந்தாவில் படுத்திருந்த வசந்தனின் தந்தை சீதாபதியருகே சென்றாள். அவர் இன்னும் உறங்கிக் கொண்டிருந்ததே அவளுக்கு

விந்தையாக இருந்தது. வைகறையிலே எழுந்து காவேரியில் குளித்த ஈரத் தன்மையோடு, திருப்பாவை ஒதிக் கொண்டே தெருப் பக்க வராந்தாவி லிருந்த பெஞ்சியில் அமர்ந்திருக்கும் அவர் இன்று ஏனே எழவில்லை.

அவரது கட்டிலருகே சென்று, ''மாமா! உடம்பு சரியில்லையா, என்ன?'' என்று கேட்டாள்.

''ஆமாம், மணி ரொம்ப ஆகிவிட்ட தாம்மா?'' என்று வினவினர் அவர்.

''இல்லே, மாமா! மணி ஏழுதான் ஆகிறது. நீங்கள் எழுந்து பல் துலக் குங்கள். கொஞ்சம் காப்பி சாப்பிட் டால் சரியாகிவிடும். நான் போய் வெந்நீரும், பல்பொடியும் கொண்டு வருகிறேன்.''

'க்வார்ட்டர்ஸ்' மிகவும் சிறியதாகை யால் அவர்கள் பேசியதெல்லாம் வசந்தனுக்குத் தெளிவாகக் கேட்டது. ''என்னப்பா, திடீரென்று ஜுரம்?'' என்று கேட்டுக் கொண்டே அவரை நெருங்கிப் பரிசோதித்தான். ''ஒன்று மில்லை. கொஞ்சம் அலையாமல் வீட்டி லேயே ஓய்வாக இருங்கள். ஆஸ்பத்தி ரிக்குப் போனதும் மருந்து அனுப்பு கிறேன்!'' என்றான்.

குளியலை முடித்துக் கொண்டு காலை உணவு கொள்ள மேஜையெதிரே வந்து அமர்ந்த வசந்தனிடம், ''மாமாவுக்கு ஒரே ஒரு இட்டிலி தரவாமில்லையா?'' என்று கேட்டாள் குழலி.

''ஒருநாள் இட்டிலி தாரா மல் இருக்கக் கூடாதா, என்ன? காலையில் ஒன்றும் வேண்டாம். மருந்து அனுப்புகிறேன். வீட்டில் மருந்து இல்லை. அதைக் காப்பியோடு கொடு, போதும். எனக்குத் தெரியாமல் இட்டிலி தந்துவிடாதே....!'' என்றான் வசந்தன்.

''தரமாட்டேன். மாமாவுக்கு ஆகாத தைத் தரமாட்டேன்'' என்று குழலி மனப்பூர்வமான குரலில் கூறினள்.

வசந்தனின் உண்மையை ஒட்டிய ஹாஸ்யங்களை யெல்லாம் நகைச்சுவை யாகவே ஏற்காமல் உண்மைப் பொரு ளாகவே ஏற்றுக் கொள்வாள் அவள். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் வசந்த னுக்குக் காரணமில்லாமலே சீலியாவின் நினைவு வந்துவிடும். ஒரு தனி மலருக் கும், ஒரு மலர் மாலைக்கும் உள்ள வித்தியாசம் குழலிக்கும், சீலியாவுக் கும்! ஒரு நூறு மலர்களின் மென்மை யும், தண்மையும், மணமும் ஒருங்கே நிறைந்து உடலும் மணமும் சூழ்ந்து புல்லரிக்க நிற்பவள் சீலியா. அந்த நினைவின் சுகந்தம் கவிழ்ந்து கொண் டால் அதிலிருந்து விடுபடவே அவ னுக்கு விருப்பம் இருப்பதில்லை. முப்பட் டைக் கண்ணாடியில் ஒளி விலகும் போது ஒடிந்து தெரிவது போல் தன்னை விட்ட தூரத்தில் பழைய நினைவின் மின்னல்கள் இனிய இழை யாட்டங்களாகத் தனித்துப் புலப்படும். இப்படி முடிந் ததே! எத்தனை கற்பனைகள் அதற்கு? எத்தனை கனவுகள் அதற்கு?

''என்னவாம் திடீரென்று சிந்தனை?''

வசந்தன் திடுக்கிட்ட வாறே நிகழ் காலத்துக்கு வந்தான். கையில் இட்டிலி



## பாரதி உள்ளம்!

புதுச்சேரி தேசபக்தர்களுக்குள் வ. வே.சு. ஐயரைப் போல் நூற் பயிற்சி உள்ளவர்கள் யாருமே இல்லையெனச் சொல்லலாம். அபாரமாகப் படிப்பார். வீரர்களின் சரித்திரம், இலக்கியம், யுத்த சாஸ்திரப் புத்தகங்கள், பழைய தமிழ்க் காவியங்கள், பிற நாட்டு நல்லறிஞர்களின் நூல்கள் இவைகளை அய்யர் இடைவிடாது படித்துக் கொண்டிருப்பார். கஸ்ரத் செய்வதில் அய்யருக்கு ரொம்ப ஆவல். நீந்துவார், ஓடுவார். பாரதியாருக்கும் இவைகளில் ரொம்ப ஆசைதான். ஆனால் செய்வதேயில்லை. எல்லாவற்றையும் பக்கத்திலிருந்து கொண்டு உற்சாகத்துடன் வேடிக்கை பார்ப்பார்.



அய்யர் கஸ்ரத் செய்யும்போது பாரதியார் பார்த்துக் கொண்டிருந்தால் அய்யர் எப்படி உடம்பை வளைக்கிறாரோ, அதைப் போல் பாரதியார் தன் நினைவு இல்லாமல் வளைப்பார். பாரதியாரின் உள்ளம் அவ்வளவு உற்சாகம் நிறைந்த உள்ளம். மெழுகு உள்ளம்; யோசித்து ஈடுபடுகிற உள்ளம் அல்ல. நல்ல காரியங்களில் யோசனையின்றி அவரது உள்ளம் ஒட்டிக் கொள்ளும். இதற்குத்தான் கவிதை உணர்ச்சி என்று பெயர். இதுவே காதல் உள்ளமாகும்.

**'மகாகவி பாரதியார்' என்ற நூலில் அறிஞர் வ. ரா.**

**தகவல்: வி. ச. வாசுதேவன்**

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

விள்ளல். குழலியின் பார்வை அவனது அந்தராத்மாவையே துருவிப் பார்ப்பதைப் போன்ற கூர்மையோடு அவன் முகத்தில் படிந்தது. இப்படி அவன் தன் நிலை மறக்க நேர்ந்தபோதெல்லாம் அவளது பார்வையிலிருந்து அவனால் தப்ப முடிந்ததில்லை.

''உங்களுக்கு நேரமாகிறதில்லையா?''

மறுபடியும் குழலியின் குரல் கேட்டு விழித்தான்.

''ஆமாம்'' என்று கூறி, அவன் அவசரமாக இட்டிலியை விழுங்கிவிட்டு எழுந்தான்.

வசந்தன் உடைகளை மாற்றிக் கொள்ளவும், ஆஸ்பத்திரி 'வேன்' வரவும் சரியாக இருந்தது. தெரு வாசலைக் கடந்தபோது குழலி குரல் கொடுத்தாள் :

''மறந்து விடாதீர்கள். சென்றதும் உடனேயே மாமாவுக்கான மருந்தை அனுப்பி வையுங்கள்.''

சீதாபதியின் நெஞ்சில் நிறைவு பூத்திருந்தது. அது இன்று நேற்று பூத்ததல்ல. குழலி அந்த வீட்டில் அடியெடுத்து வைத்த அன்றே தம் இல்லம் தேடித் திருமகளே வந்த மகிழ்ச்சி அவருக்கு. வலிய வந்த லட்சுமி அவள் என்று பூரித்தார் அவர். செல்வத்தில் பிறந்திருந்தாலும், அவளது அடக்கமும், சாந்தமும் யாருக்கு வரும்? அவரிடம் அவள் செலுத்தும் பக்தியும், கணவனிடம் காட்டும் பணிவும் மற்றவர்களிடம் சாதுரியமாக அன்போடு பழகும் நயமும் அவருக்கு மிகவும் பிடித்துவிட்டன. குழலியைப் பார்க்கும் போதெல்லாம் அவருக்கு ஒரே ஒரு குறை தோன்றுவதுண்டு. செல்லம்மா இருந்தால் எத்தனை மகிழ்வாள்! அவள் தேடி முடித்த அருமையான மருமகளுடன் அவள் கொஞ்ச நாளாவது திருப்தியோடு வாழ்ந்து விட்டுப் போயிருக்கலாகாதா? லட்சாதிபதியான மீனாட்சிசுந்தரமும் அவரது மனைவியும்கூடத்தான் எத்தனை எளிமையாய்ப் பழகுகிறார்கள்! பிறரை எப்படி மரியாதையாக உபசரிக்கிறார்கள்! மனிதர்களின் தராதரம் கண்டு எடை போடுவதில் செல்லம்மா கெட்டிக்காரிதான். அவளது விருப்பம் எத்தனை சீக்கிரம் நிறைவேறிவிட்டது? செல்லம்மாவின் நினைவு வரும்போதெல்லாம் அவரை ஒரு நிறைவான இனிமையே தாக்கும். இழப்பும், அவலமும் அவருக்குப் புலப்படுவதில்லை. அந்தத் தெய்வ மலர் இறைவனின் பாதத்தில் கம்பீரமாக வீற்றிருக்கும் என்பது அவரது எண்ணம். செல்லம்மாவின் நினைவு சிதையாமலேயே அவர் உள்ளத்தில் வீற்றிருந்தது.

''ஐயா!'' — வாசலில் தபால் ரன்னர் குரல் கொடுத்தான். அவன் கையில் ஒரு கட்டுக் காகிதங்கள்..... இத்தனை நேரம் குழலி ஓடி வந்து கடிதத்தை வாங்கியிருக்க வேண்டுமே! உள்ளேயிருந்து அரவமே காணோமே!

''அம்மா, குழலீ! குழலீ!''

பதில் வராமற் போகவே, தட்டுத் தடுமாறியவாறே சீதாபதி எழுந்து கடிதங்களைப் பெற்றுக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தார்.

மெல்லிய முனகல் அறையிலிருந்து கேட்டது. ''என்னம்மா குழலீ?''



உங்கள் கனவை
நனவாக்க
பின்னியின்
தூய பட்டுப்
புடவை
மென்மை சுகமும்,
அழகும் மிக்க புடவை உடுத்தி
கனவுலக இன்பம் காண விரும்பும்
எழில் மங்கையருக்கு பின்னியின்
தூய பட்டுப் புடவை
அவ்வனுபவத்தை அளிக்கிறது.
என்ன கவர்ச்சி!...என்ன பள
பளப்பு!...பின்னியின் தூய பட்டுப்
புடவை, நினைவாக்கும் கனவிதுவே.
பின்னியின் தூய பட்டுப் புடவை,
தூய ஜார்ஜெட், மென் பட்டு,
ஷாட் ஸில்க்.
bm-4268







# அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

## தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. L-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்— அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள்!

இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.




**இன்க்ரிமின்*...
வளர்ச்சிக்கு
மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

CHCL-36 TAM

Lederle லெடர்லி டிவிஷன், ஸயனமிட் இந்தியா லிமிடெட் CYANAMID

என்று கேட்டார் சீதாபதி வெளியி லிருந்த வண்ணமே.

''ஒன்றுமில்லே. மயக்கமாக வந்தது. அதுதான் படுத்துக் கொண்டேன்'' என்ருள் குழலி.

''என்ன.....ஏன்?'' என்று பதறினர் சீதாபதி.

''சாப்பிடாததாக இருக்கலாம்!''

''பார்த்தாயா இனி இப்படிப் பட்டினி கிடக்காதேம்மா. காலேயி லேயே சாப்பிட்டுவிடு. போ, போய் இட்டிலி சாப்பிடு. கடிதங்களே மேஜை மீது வைக்கிறேன். அப்புறமாகப் பார்.''

சீதாபதி உட்காருவதற்கு அடை யாளமாகக் கட்டில் கிறீச்சிட்டது. குழலி சமையல் அறைக்கு வந்தாள். இரண்டு இட்டிலிகளேத் தட்டில் வைத் துக்கொண்டு மேஜை மீது அமர்ந் தாள். இட்டிலியைப் பிய்த்துச் சட்டினி யில் தோய்த்து வாயிலிட்டுக் கொண் டாள். அந்தச் செயலேயே தடுத்தாற் போல் சட்டெனத் தவிப்பு ஏற்பட்டது. ஒரு மிடறு நீரை உறிஞ்சினுள் அவள். ஆயினும் ரப்பர் பந்து சுவரில் அடித்து மீள்வது போல் தொண்டைக்குள் இறங் கிய விள்ளல் குபீரென்று வாந்தியாக வடிவெடுத்தது.

குழலி ஆயாசத்தோடு தன் படுக் கையில் வந்து படுத்தாள். அயிரம் கண்கள். அவளது இந்த 'ரகசிய'ச் செய்கையைக் கவனிப்பது போன்ற பரபரப்பு ஏற்பட்டது. மலர்களின் மகரந்தப் பேழைகளில் தாதவிழ்ந்து மூடிக் கனன்று உயிர்த்துவிட்ட பேரா னந்தம், கோமளமான சுகானுபவமாக அவளே ஏந்திக் கொண்டது.

மணி பதினென்று அடித்தது. குழலி 'விருட்'டென எழுந்து உள்ளே ஓடினுள். முதலில் பற்றியிருந்த சோர்வு இருந்த இடம் தெரியவில்லே. மனத்தின் புரி யாத குதூகலம் தென்பூட்டியது. ஒரு மணிக்கெல்லாம் கணவரின் சொற்படி ரசம் சாதத்தைக் கரைத்துக் கொண்டு சீதாபதியருகே வந்தவள் திடுக்கிட் டாள். 'ஏதேதோ சமைத்து விட் டோமே. மாமா வெறும் ரசம் சாதம் மட்டும்தானே சாப்பிட வேண்டும்?' என்று அவள் உள் மனம் வருந்தியது.

''என் வாய்க்கு ஏற்றபடி நிறைய மிளகு வைத்து ரசம் வைத்திருக்கிருயே. ரொம்ப நன்ருக இருக்கிறதம்மா'' என்றவாறே, ரசக் கரைசலே விழுங் கினுர் சீதாபதி.

''நீயும் போய்ச் சாப்பிடு அம்மா! அவன் வந்து சாப்பிட்டுக் கொள் கிருன்!'' என்ருர் சீதாபதி.

''உம்'' என்று உள்ளே வந்தவள் மாத்திரையையும் வெந்நீரை யும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வந்தாள். மேசை மீதிருந்த பிரிபடாத கடிதங்கள் படபடத்தன. அதன் மீது அவளுக்கு ஆசையோ, இரக்கமோ ஏற்படவில்லே. 'இது உண் மையா, இது உண்மையா?' என்ற மனத்தின் கேள்விக்குப் பதில் தரும் நாட்டத்தில் படுக்கையில் சாய்ந்தாள். எண்ணும் களேப்பும், உண்ணுக் களேப் பும் அவளேத் தன்னே மறக்கச் செய்து விட்டன.

''குழலி!''

மெல்லிய குரல் காதோரம் கேட்ட தும் அவளுக்கு வெட்கமாகப் போய் விட்டது. வசந்தன் வந்துவிட்டிருந் தான். உடைகூட மாற்றிக் கொண் டிருந்தான். உணவு பரிமாற அவள் நகர்ந்தபோது அவள் தோள்களே வசந்தனின் விரல்கள் தடுத்தன.

''நண்பன் ஒருவன் வந்திருக்கிருன். இரு வருக்குமாகப் பரிமாறு.''

''ஆகட்டும்.''

தலேயைச் சீர்செய்து கொண்டு நகுங் கிய உடைகளேச் சரிசெய்தவாறே குழலி உணவுக்கான ஏற்பாடுகளேச் செய்தாள்.

''வா! சங்கர்!'' என்றவாறே மேசை யருகே வந்தான் வசந்தன்.

## பாரதியின் சிரிப்பு!

பாரதியாரின் சிரிப்பு, சங்கீதத்தில் ரவை புரளுவது போன்ற சிரிப்பு. அதிர் வேட்டைப் போல் படீரென்று வெடிக்கும் சிரிப்பல்ல; அமர்ந்த சிரிப்புமல்ல; வஞ்சகத்தை உள்ளே வைத்துக் கொண்டு, வாயை மட்டும் திறந்து பல்லேக் காட்டி, சிரிப்பைப் பழிக்கும் சிரிப் பல்ல. புன்னகையைப் புஸ்தகத்திலே படிக் கலாம். ஆனுல் பாரதியாரிடம் புன்சிரிப்பைப்



பார்க்க முடியாது. சந்நேச் சிரிப்பைத்தான் காண முடியும்.

பாரதியாரின் இந்தச் சிரிப்பிலே ஈடு பட்டுப் போனவர் டாக்டர் நஞ்சுண்டராவ். பாரதியாருடைய அகத்தின் அழகையும் தூய்மையையும். மேன்மையையும் அவரது முகத்திலும் சிரிப்பிலும் கண்டு மகிழ்ந்தவர் நஞ்சுண்ட ராவ்.

'மகாகவி பாரதி'யாரில் அறிஞா வ. ரா.

தகவல்: வி. ச. வாசுதேவன்

அரட்டைச் சங்கரன் விநோதமான அடக்கத்தோடும், பொய் பவ்யத்தோடும் வந்து உட்கார்ந்தான். ஊடை யாக அவன் கண்கள் குழலியை எடை போடவும் தவறவில்லை. வாய்க்கு ருசியான உணவு. வசந்தனுக்குப் பிடித்த அவியல், வடை, மோர்க் குழம்பு, பாயசம் வேறு. கட்டித் தயிர். மாங்காய், எலுமிச்சம் பழம், பச்சை மிளகு ஊறுகாய் தினுசுகள் வேறு.

''நீ ரொம்பக் கொடுத்து வைத்தவன்தான் வசந்த்! எதிலுமே அதிர்ஷ்டக்காரன்! கல்லூரி நாளில் அக்கினியாக இருந்தவளை நெருங்கி உறவாடினாய். இப்போது பக்கா குடும்பப் பாங்குள்ள, ஆனால் படித்த பணக்காரப் பெண்ணை மணந்து கொண்டு விட்டாய்... உம்'' என்று குழலி எதற்கோ உள்ளே போன போது கிசுகிசுத்தான்.

அதற்குள் குழலி திரும்பி வரவே, ''என்னப்பா வசந்த்! பாயசமெல்லாம் தடபுடல் படுகிறதே! சொல்லியனுப்பினாயா?'' என்று உரத்த குரலில் போலி சௌஜன்யத்தோடு கேட்டான்.

வசந்தன் அவனது பொறுமைக்குச் சிரித்தவாறே ''அப்படித்தான் வைத்துக்கொள்ளேன்'' என்றான்.

குழலி உணவு எடுத்து வர மீண்டும் உள்ளே சென்றபொழுது, ''ஆமாம், இப்படி ஒரு நல்ல மனைவியை வைத்துக் கொண்டு, ஏன் இப்படி குக்கிராமத்தில் உட்கார்ந்திருக்கிறாய்? மாமனார் பணம் வாரிசில்லாமல் குவிந்து கிடக்கிறது! சொந்த டிஸ்பென்ஸரி வைப்போமென்றில்லாமல் ஏன் இப்படிச் சேவையை எண்ணித் தூக்கம் காக்கிறாய்? அவளுக்கு இப்படியெல்லாம் 'நம் உணவை'ச் சமைக்கத் தெரியுமா? உன் அப்பாவையும், குடும்பத்தையும் கவனிக்கும் பொறுமை இருக்குமா? வெறும் கேக்கையும் ரொட்டியையும் ஜாமோடு சாப்பிட்டால் சீக்கிரமே அலுத்து விடுமடா!'' என்றுதொடர்ந்தான் சங்கரன்.

''சங்கர்! தயவுசெய். மறுபடியும் பழைய புண்ணைக் கிளறாதே! உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்!''— இதைச் சொல்லும்போதே வசந்தனின் குரல் நொந்து போய்க் கரகரத்தது.

''மன்னிச்சுக்கப்பா. என் விளையாட்டு உன்னை எப்போதும் புண்படுத்தி விடுகிறது!'' என்று வருந்தும் குரலில் கேட்டுக்கொண்டான் சங்கரன்.

வசந்தனும் சங்கரனும் சாப்பிட்ட பின் வீட்டில் தங்கவில்லை. ஆஸ்பத்திரிக்கே கிளம்பி விட்டனர். கொஞ்ச நேரத்துக்கு முன் கொண்டிருந்த குதூகலமெல்லாம் இரத்த விளாறுகி வடிவதைப் போன்ற குரூர வலியில் அவதிப்பட்டாள் குழலி. **(தொடரும்)**

---

## மாப்பிள்ளை 420 (நாடகம்)

உணவுக்கு அறுசுவையும், இலக்கியத்துக்கு ஒன்பது சுவையும் இருப்பதாக வரையறுத்தார்கள் வல்லுநர்கள். ஆனால் இந்த நாட்களில் நவரசமும் ததும்பி நிற்க வேண்டிய நாடகங்கள் நகைச்சுவையையே மிகையாகக் கொண்டிருக்கின்றன. மாப்பிள்ளை 420 இதற்கு விலக்கல்ல.

நவஜீவன் தியேட்டர்ஸ் அளிக்கும் இந்த நாடகத்தில் மாப்பிள்ளை மட்டும் 420 ஆக, அதாவது ஏமாற்றுக்காரனாக இல்லை. கதையைப் பின்னிப் பிணைத்து ஓட்டிச் செல்லும் பாத்திரங்கள் அனைத்துமே ஏதாவது ஒரு வகையில் '420' செய்கின்றன. அப்படிச் செய்தாலும் முடிவு சுபமாக ஜாம் ஜாமென்று நான்கு கல்யாணங்களை முடித்து வைப்பதாக அமைவது மனத்துக்கு நிறைவு தருகிறது.



நடிப்பவர்கள் அனைவரும் அமெச்சூர் நடிகர்களாயினும், நடிப்பு அவர்களை '420' மோசடி செய்துவிடவில்லை. எல்லோருமே, பாத்திரத்தின் குணமறிந்து, தரமறிந்து நல்ல பெயர் எடுக்கிறார்கள்.

இப்படி நல்ல பெயர் எடுப்பதற்குக் காரணம் நகைச்சுவை வசனங்கள், அவ்வசனங்களுக்கு ஏற்ற கோணங்கி நடிப்புகள் எல்லாம் அளவோடு, சில இடங்களில் அளவு மீறி, இருக்கின்றன. இன்றைய நாடகம் வரையறுத்துக் கொண்டிருக்கும் பாதையிலே கவடு மாறாமல் செல்கிறது என்றாலும், கதையைக் கொண்டு போயிருக்கும் முறை பழைமையோடு புதுமை கலந்து தனித்து நிற்பதாகப் பிரமிக்க வைக்கிறது.


அருணகிரி விலாஸ்
சீயக்காய் பவுடர்

# குடும்பத்தில் அமைதி குலைவதேன்?

- குடும்பம் குருக்ஷேத்திரமாக மாறுவதில் மாமனார், மாமியார், மைத்துனன்,
- மைத்துனி ஆகியோரும் பங்கு பெறுவதுண்டு! நம்முடைய சிறு தவறுகள்
- கூடப் பெரும் பூசலுக்கு வழிகோலுவதுண்டு. தவறுகளையுணர்ந்து, அவற்
- றைத் தவிர்த்தோமானால் அமைதி நிலவத் தடையேது?

கணவனும் மனைவியும் செய்யும் தவறுகளைக் கோடி காட்டும் வகையில் இருவர்க்கும் தனித்தனியே ஏழு கேள்விகளை அளித்திருக்கிறோம். ஒவ்வொரு பிரச்னைக்கும் விடை காண மூன்று வழிகள் (அ. ஆ. இ) உள்ளன குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் அ. ஆ. இ - இவற்றுள் நீங்கள் எந்த வழியைப் பின்பற்றுவீர்கள்? ஒவ்வொரு கேள்விக்கும் அருகில் நீங்கள் கடைப் பிடிக்க விரும்பும் வழியை 'அ' அல்லது 'ஆ' அல்லது 'இ' என்று குறித்துக் கொள்ளுங்கள். கடைசியில் கட்டுரையின் முடிவிலுள்ள அட்டவணைப் படி மதிப்பெண் (Mark) வழங்கிக் கொள்ளுங்கள். உங்கள் குடும்ப அமைதியைப் பற்றிய உண்மைநிலை உங்களுக்கே எளிதில் விளங்கும்! சரியான விடைக்குரிய ஆதாரம் கட்டுரையின் இறுதியில் விளக்கப் பெற்றுள்ளது.

## மனைவிக்கு

**1. ஓய்வு நேரத்தில் நீங்கள்**

(அ) பயனுள்ள நூல்களைப் படிப்பதுண்டா? அறிந்து கொண்ட புதிய செய்திகள், கருத்துக்கள் பற்றி உங்கள் கணவரிடம் எடுத்துக்கூறி உரையாடுவதுண்டா?

(ஆ) பக்கத்து வீட்டுப் பெண்மணிகளிடம் உங்கள் குடும்பப் பிரச்னைகளை எடுத்துரைத்து அவற்றுக்குத் தீர்வுகாண முயலுவீர்களா?

(இ) தனிமையில் உங்கள் குடும்பப் பிரச்னைகள் பற்றிச் சிந்தித்தவண்ணம் இருப்பீர்களா?

**2. உங்கள் கணவர் செய்யும் தவறுகள், குறைகள் பற்றி**

(அ) உங்கள் பெற்றோர்கள், உறவினர்களிடம் கலந்து பேசும் வழக்கம் உண்டா?

(ஆ) உங்கள் கணவரிடமே துணிந்து எடுத்துரைத்து, அவரைத் திருத்த முயலுவீர்களா?

(இ) கணவர் என்ன தவறு செய்தாலும் அது பற்றி அவரிடமே குறை கூறுவது முறையாகாது என்று கருதி உங்கள் எண்ணங்களை மனத்துக்குள்ளேயே தேக்கி வைத்துக் கொள்வீர்களா?

**3. காலையில் உங்களிடம் கோபித்துக் கொண்டு ஆபீசுக்குச் சென்ற உங்கள் கணவர் மாலையில் வீடு திரும்பியதும்**

(அ) அவராகவே உங்களிடம் வந்து பேசும்வரை நீங்கள் அவரிடமிருந்து ஒதுங்கி யிருப்பீர்களா?

(ஆ) எதுவும் பேசாமல், அவருக்கு வழக்கமாகச் செய்யும் பணிவிடைகளைச் செய்வீர்களா?

(இ) சுயகௌரவத்தை இழந்தாலும் பாதகமில்லை என்று நீங்களாகவே வலுவில் அவரிடம் சென்று முகம் கொடுத்துப் பேசுவீர்களா?

**4. அலுவலகத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவம் குறித்துக் கணவர் உங்களிடம் பேசும்போது**

(அ) 'உங்கள் ஆபீஸ் வியவகாரம் எல்லாம் எனக்கு எதற்கு?' என்று உங்கள் வேலையைக் கவனிக்கப் போய் விடுவீர்களா?

(ஆ) ஏதோ சொல்லுகிறார், கேட்டு வைப்போமே என்று விருப்பு வெறுப்பின்றிக் கணவர் கூறுவதை மௌனமாகச் செவிமடுப்பீர்களா?

(இ) அவர் சொல்லுவதை ஆர்வத்துடன் கேட்டு, அதையொட்டி உங்கள் கருத்துக்களையும் கூறி அவருடன் உற்சாகமாக உரையாடுவீர்களா?

குடும்பப் பிரச்னை

5. கணவர் வீட்டில் இல்லாத வேளையில் உங்கள் மகன் எதிர்த்துப் பேசி வாயாடினால்

(அ) நீங்களே அவனை உடனடியாகக் கண்டித்து விடுவீர்களா ?

(ஆ) நீங்கள் கண்டித்தது போதாதென்று, கணவர் வீடு திரும்பியதும் அவரிடமும் பையனின் செய்கையை எடுத்துச் சொல்வீர்களா ?

(இ) கணவருக்குத் தெரிவித்தால் எங்கே அவர் பிள்ளையை அடித்து விடுவாரோ என்று கருதி, நடந்த விஷயத்தை மூடி மறைத்து விடுவீர்களா ?

6. ஒரு நாடகம், திரைப்படம் அல்லது புத்தகம் பற்றி உங்கள் கணவரோடு நீங்கள் கருத்து வேற்றுமை கொண்டால்

(அ) உங்கள் கருத்தினைச் சுருக்கமாக எடுத்துரைப்பீர்களா ?

(ஆ) தக்க காரணங்களைத் தேடிப் பிடித்து, உங்கள் கருத்துக்கு விளக்கம் கொடுத்து உங்கள் கட்சியை வலியுறுத்துவீர்களா ?

(இ) கணவரின் கருத்து பிழையானது என்பதைத் தயக்கமின்றி வெளியிடுவீர்களா ?

7. உங்கள்மேல் உள்ள கோபம் காரணமாக, உங்கள் அம்மாவையோ அல்லது உறவினர்களைக் குறித்தோ உங்கள் கணவர் இளப்பமாகப் பேசினால்,

(அ) 'உங்கள் அம்மா மட்டும் என்னவாம்.....?' என்று கடுகடுத்துத் திருப்பிக் கேட்பீர்களா ?

(ஆ) 'என்னிடம் கோபம் என்றால் என் அம்மாவை ஏன் இழுக்கிறீர்கள் ?' என்று கேட்பீர்களா ?

(இ) 'யாரை வேண்டுமானாலும், என்ன வேண்டுமானாலும் அவருக்கு அலுக்கிறவரை திட்டிவிட்டுப் போகட்டும்!' என்று பேசாமல் இருந்து விடுவீர்களா ?

## கணவருக்கு

1. சம்பளம் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தால்,

(அ) பணத்தை மனைவியிடம் கொடுக்கும் வழக்கம் உள்ளவரா நீங்கள் ?

(ஆ) உங்கள் பெட்டியில் வைத்துப் பூட்டி, சாவியை உங்களிடமே வைத்துக் கொள்வது வழக்கமா ?

(இ) மனைவியும் கையாளக்கூடிய இடத்தில் பணத்தை வைப்பீர்களா ?

2. மனைவியின் சமையல் நன்றாக இல்லையென்றால்,

(அ) 'சே! என்ன சமையல் இது!' என்று அதிருப்தியை வெளிப்படையாகக் காண்பிப்பது வழக்கமா ?

(ஆ) வாய் பேசாமல் போட்டதைச் சாப்பிட்டு விட்டுப் போய் விடுவீர்களா?

(இ) 'முன்பெல்லாம் நீ எவ்வளவு ருசியும் மணமுமாகச் சமையல் செய்வது வழக்கம்! உன் திறமையெல்லாம் எங்கே மறைந்துவிட்டது இப்போது?' என்ற ரீதியில் சமையலில் உள்ள குறைபாட்டினை எடுத்துக் காட்டுவீர்களா ?

3. மனைவி உங்களிடம் சண்டை பிடித்துக் கொண்டு பிறந்த வீடு செல்ல விரும்புவதாகக் கூறினால்,

(அ) உடனடியாக அவள் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்வீர்களா ?

(ஆ) 'உன் இஷ்டம்போல் செய்!' என்று பொதுப் படையாகக் கூறி விடுவீர்களா ?

(இ) 'போகக் கூடாது!' என்று தடையுத்தரவு பிறப்பிப்பீர்களா ?

4. 'நீங்கள் வரவர என்னை லட்சியம் செய்வதே யில்லை. என்னிடம் இப்போதெல்லாம் உங்களுக்கு அக்கறையே இல்லை!' என்று மனைவி குறை கூறினால்,

(அ) அவளைப் புகழ்ந்து பாராட்டி அடிக்கடி முகஸ்துதி செய்ய ஆரம்பித்து விடுவீர்களா ?

(ஆ) பாராட்டுவதற்குரிய சந்தர்ப்பங்கள் வரும் போது, முகம் மலர்ந்து ஓரிரு வார்த்தைகள் சொல்லுவீர்களா ?

(இ) 'இதற்கெல்லாம் எனக்கு நேரம் ஏது ? நீ செய்கிற ஒவ்வொரு காரியத்தையும் நான் கவனித்துக் கொண்டிருந்து புகழ்மாலை தொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதே!' என்று எரிச்சலோடு கூறி விடுவீர்களா ?

5. நீங்கள் மனைவியுடன் சண்டை பிடித்துக் கொண்டிருக்கையில் உங்கள் மகனோ அல்லது மகளோ அங்கு வந்து எட்டிப் பார்த்தால்,

(அ) 'பார்த்தாயா, உன் அம்மாவின் லட்சணத்தை ?' என்று உங்கள் மனைவி செய்த தவற்றினை அவள் எதிரிலேயே விளக்கிக் கூறுவீர்களா ?

(ஆ) மகனை (அல்லது மகளை) தனிமையில் அழைத்து விஷயத்தைக் கூறுவீர்களா?

(இ) 'உனக்கு ஒன்றுமில்லை; நீ போய் உன் வேலையைக் கவனி!' என்று நாசுக்காகக் கூறி அவர்களை வெளியே அனுப்பி விடுவீர்களா?

6. உங்கள் தாயாருக்கும் மனைவிக்குமிடையே மோதல் ஏற்படும்போது,

(அ) தாயார் பக்கம் பரிந்து பேசுவீர்களா?

(ஆ) மனைவிக்குப் பரிந்து பேசுவீர்களா?

(இ) தலை மயிரைப் பிய்த்துக்கொண்டு (அதாவது, அப்படிப் பாவனை செய்து) அங்கிருந்து வெளியே கிளம்புவீர்களா ?

7. மாலையில் ஆபீஸ் வேலை முடிந்ததும் நேராக ஒரு சினிமாவுக்குச் செல்லுவதாகக் காலையிலே திட்டம் போடுகிறீர்கள். நீங்கள் சினிமாவுக்குச் செல்வது குறித்து

(அ) காலையிலேயே மனைவியிடம் தெரிவித்து விடுவீர்களா?

(ஆ) திரும்பி வந்ததும் சொல்லுவீர்களா?

(இ) கேட்டால் சொல்லிக் கொள்ளலாம் என்று பேசாமலிருப்பீர்களா?



### தேர்வு எண்கள் :

**மனைவிக்கு**

| கேள்வி எண் | அ | ஆ | இ |
|---|---|---|---|
| 1 | 8 | 2 | 4 |
| 2 | 2 | 7 | 4 |
| 3 | 2 | 5 | 9 |
| 4 | 2 | 4 | 9 |
| 5 | 4 | 6 | 2 |
| 6 | 7 | 4 | 5 |
| 7 | 0 | 2 | 8 |

**கணவருக்கு**

| கேள்வி | அ | ஆ | இ |
|---|---|---|---|
| 1 | 4 | 2 | 8 |
| 2 | 1 | 3 | 7 |
| 3 | 2 | 7 | 1 |
| 4 | 3 | 7 | 2 |
| 5 | 0 | 2 | 8 |
| 6 | 2 | 0 | 8 |
| 7 | 8 | 6 | 2 |

எங்கே, நீங்கள் வாங்கிய தேர்வு எண்ணைப் பாருங்கள்! மொத்தம் 48க்கு மேல் நீங்கள் தேர்வு எண் பெற்றால் நீங்கள் உளவியல் நன்கு அறிந்தவர்கள்; உங்கள் குடும்பத்தில் பூரண அமைதி நிலவும் என்பதில் ஐயமில்லை. 35 முதல் 48 வரை என்றால், வெகுவாக அமைதி நிலவும் குடும்பம் என நம்பலாம். 35க்குக் குறைவு என்றால்.... கவலைப்படாதீர்கள்! உங்கள் தவறுகளைத் திருத்திக் கொள்ள இன்னும் காலம் தாழ்ந்துவிடவில்லை!

### விடைகளுக்கு விளக்கம்:

**மனைவிக்கு**

1. (ஆ) பக்கத்து வீட்டுப் பெண்மணிகளிடம் உங்கள் குடும்பப் பிரச்னைகளைக் கொட்டி அளப்பதால் பிரச்னை தீர்ந்துவிடப் போவதில்லை. மாறாக, உங்கள் தலை மறைந்ததும் அவர்கள் வம்பு வளர்க்க இதுவே தீனி ஆகிவிடவும் கூடும்!

   (இ) நீங்கள் என்னதான் தனிமையில் சிந்தித்து முடிவெடுத்தாலும், முக்கியமான பிரச்னைகளில் கணவரைக் கலந்து ஆலோசிக்காமல் இருக்க முடியாதல்லவா? எனவே (அ)தான் சரியான விடை, அல்லவா?

2. (அ) தன் குறைகளைத் தன் மனைவி பிறரிடம் எடுத்துரைப்பதை எந்தக் கணவன் வரவேற்பான்?

   (இ) தான் செய்வது தவறு என்று கணவன் உணரவில்லையானால், நீங்கள் எடுத்துரைக்காவிட்டால் அதை அவன் புரிந்துகொள்ள வழி என்ன? (ஆ)தான் சரியான வழி.

3. (இ)தான் சிறந்த வழி என்பதற்கு விளக்கம் தேவையில்லையே?

4. நீங்கள் கேட்டு ரசிக்க வேண்டும் என்பதற்காகத்தானே கணவர் உங்களிடம் தெரிவிக்கிறார்? அப்போது நீங்கள் 'உம்மணாமூஞ்சி'யாக இருப்பது முறையாகுமா?

5. பையன் பேனாவைத் தொலைத்து விட்டான், ஆணியில் மாட்டிக் கொண்டு அவன் சட்டை கிழிந்து விட்டது - இது போன்ற தவறுகள் தற்செயலாக நிகழ்பவை. எதிர்த்துப் பேசுவது — அதுவும் தாயிடம் — பெருந்தவறு என்பதை உங்கள் கணவரும் வலியுறுத்தும்போது சிறுவனுக்குத் தன் தவறு நன்கு புலனாகுமல்லவா?

6. பிறர் பிழையை எடுத்துக் காட்டுவதைவிட, உங்கள் கருத்து சரியானது என்பதை நிலைநாட்டுவதே சிறந்தது. ஆனால் உங்கள் கருத்தோ அதற்குரிய ஆதாரமோ தவறு எனத் தெரிந்துவிட்டால் தயக்கமின்றி ஒப்புக் கொள்ளவும் வேண்டும்.

7. இதற்கு விளக்கம் தேவையா? சும்மா இருப்பதே சுகம். 'இ'தான் சரி.

**கணவருக்கு**

1. பரஸ்பரம் நம்பிக்கையும் நல்லெண்ணமும் வளர (இ)தான் சிறந்த வழி என்பதில் ஐயமேது?

2. தன் திறமையைக் கணவன் புகழும்போது எந்தப் பெண்தான் மகிழ்ச்சி அடையமாட்டாள்? (ஆ)வுக்குப் பதில் (இ)யைக் கடைப்பிடித்தால் மறுநாளே சுவையான விருந்து கிடைக்குமே?

3. தடுத்தால் பிடிவாதம் வளரும்; 'போ' என்றால், 'என்னைத் தொலைத்துவிட்டு நிம்மதியாக இருக்கலாம் என்ற எண்ணமோ?' என்று சீறுவாள். 'ஆ'வே சிறந்தது!

4. பகல் எல்லாம் அடுப்பங்கரையிலும், குழாயடியிலும் பொழுதைக் கழிக்கும் மனைவி, நீங்கள் பார்த்து மகிழ வேண்டும் என்றுதானே மாலையில் சிறிது ஒப்பனை செய்துகொள்ளுகிறாள்! 'இந்தச் சேலை உனக்குப் பிரமாதமாக அமைந்திருக்கிறது. இன்று உன் கொண்டை ஏ—ஒன்' என்று பொருத்தமாக இரண்டு வார்த்தை சொன்னால் உமக்கென்ன குறைந்தா போய்விடும்?

5. கைப்புண்ணுக்குக் கண்ணாடி எதற்கு? கணவன் — மனைவியின் அபிப்பிராய பேதம் பிள்ளைகளுக்குத் தெரிவானேன்?

6. உங்கள் தாயும் மனைவியும் உங்கள் மன நிலையை உணர்ந்து கொள்ள இதுவே சிறந்த வழி.

7. கேட்டால் சொல்லலாம் என்றிருப்பது, உங்கள் திருட்டுத்தனத்தை மனைவி உளவறிய நீங்களே வழிவகுப்பதாகும். 'சொல்லித் தொலைத்து விட்டுப் போயிருக்கலாமே?' என்ற குற்றச்சாட்டைத் தவிர்க்க வேண்டுமானால், (ஆ)வைப் பின்பற்றுவது தவறு!

— 'பாணன்'

# ஸிரிடோன்காஃபி

நீங்கள் காஃபியைத்தான்
விரும்புகிறீர்கள்-

**இதை அறிந்தே இப்பொழுது
ஸிரிடோன் காஃபி மணத்திலும்
தயாரிக்கிறோம்!**

ஒரு கோப்பை பாலில் ஸிரிடோன்
காஃபியை கலந்து அதன் சுவையான
காஃபி மணம் உங்களை எப்படி
கவருகிறது என்று பாருங்கள்




**ஸிரிடோன்
கொக்கோ
மணத்திலும்
கிடைக்கிறது**

ajanta. siris/502.

## பாரதி

இளங்கம்பன்

உரிமையென்ற வேட்கையதை
ஊட்டவந்தவன் - நம்
ஒற்றுமையை அன்னியர்க்குக்
காட்ட வந்தவன்.
சரிசமமாய் வாழ்வதற்குச்
சாலைஅமைத்தவன் - அழியாச்
சத்தியத்தின் மாண்புணர்த்தும்
பாக்கள் இசைத்தவன்.

செந்தமிழைப் புதுக்குதற்குச்
சிந்தை கொண்டவன் - நம்
சீர்மையெல்லாம் ஓங்குதற்கு
வழிகள் கண்டவன்
இந்தியாவைத் தெய்வமாக
எண்ணி வாழ்ந்தவன் - உயர்
இன்பத் தமிழ் இலக்கியமாம்
கடலுள் ஆழ்ந்தவன்.

அமுதமான காவியங்கள்
ஆக்கி மகிழ்ந்தவன் - மக்கள்
அகத்திலெல்லாம் அமரனாக
அமர்ந்திருப்பவன்
தமிழினத்தின் உய்வுக்காகத்
தவமிருந்தவன் - அந்தத்
தலைமைக் கவிஞன் பாரதியின்
புகழைப் பாடுவோம்.

## கடல்

— மின்னூர் சீனிவாசன்

நீலத் திரைக்கடல் நித்திரையற்றதோ. - அது
சால மது வெறி யுற்றதோ!
காலத்தையெள்ளிக் கடலும் சிரித்ததோ - வெண்பல்
காட்டிச் சிரிப்பை விரித்ததோ!

வாழ்வில் நரைதிரை ஏதெனக் கென்றதோ. - கடல்
மாறா இளமைதான் கண்டதோ!
யாராய இனித்திடும் இளமையை மாய்த்திடும் -காலம்
என்னையென் செய்திடும் என்றதோ!

தொட்டுக் கிடந்திடும் வானத்தைத் தாவுதோ? - அது
தூரக் கிடப்பதால் கூவுதோ?
எட்டுத் திசையதும் ஏழிசை கேட்கவே - கடல்
இன்னிசை காற்றினில் தூவுதோ!

வெண்ணிலாவெனும் கன்னியை யுண்டதோ. - கடல்
விம்மும் அலைவெறி கொள்ளுதோ.
மண்ணில் இளங்கவிச் சிந்தையைப் போலே - அம்
மாகடல் மேல்அலை துள்ளுதோ!

## கவிக் குருவி!

— தமிழ்முகன்

குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி ! - நான்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

கருவிலுரு வாகிக்
கவித்திருவு மாகிப்
பெருவெளியின் மீதும்
பேரொளியைக் கோதும்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

பரசிவமாய் வெள்ளம்
பாய்ந்துணர்வை யள்ளும்
வரசிவமாய் என்னை
வாழ்த்திடுவள், அன்னை !
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

ஞானமென்ற யாழில்
நாதமென்ற பாழில்
ஊனமொன்று நீங்க
உயிர்ச்சிறகு தாங்கக்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

அந்தரத்துத் தென்னை
அயர்ந்துவரு மென்னை
வந்தமரச் சொல்லும்
வசைமனத்தைக் கொல்லும்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

நெல்லழகு மூக்கும்
நிறைபுவனம் தூக்கும்
சொல்லமுதக் காற்றில்
சோதிமுனைக் கீற்றில்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !

காலமென்றன் கருவி !
கவிதைஎன்றன் அருவி !
ஓலமென்ற மேட்டில்
உயிர்ச்சிறகுக் கூட்டில்
குருவியொரு குருவி ! - சின்னக்
குருவியொரு குருவி !



# GRASIM

## STAPLE FIBRE · A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda

# பொன்னிவனத்துப் பூங்குயில்



கொத்தமங்கலம் சுப்பு

## அத்தியாயம் 38

## பாட்டு ஒன்று; பக்கவாத்தியம் நூறு!

அவள் உள்ளே நுழைந்ததும் முத்து ரங்கம் திடுக்கிட்டார். முதல் பார்வை யானாலும் அவள் முகத்தை இதற்குமுன் எங்கோ பார்த்ததுபோல் ஒரு நினைவு வந்தது. பேட்டி கண்டு பேசிப் பழகி வருங்கால இல்லாள் எப்படி இருப்பாள் என்று பார்ப்பதைக் காட்டிலும் அவளே நேரில் வந்து நின்றதும் அவருக்குச் சந்தோஷத்தை உண்டாக்கியது. முதலில் பெண்ணைப் பார்ப்போம் என்று அவளையே பார்த்தார். அவள் ஒரே விறைப்பாக நின்றாள். கட்டை விரல்களைத் தரையில் ஊன்றிக் கொண்டு தவம் செய்கிறவர்களைப் போல் அவள் நிமிர்ந்து நின்றாள். இவளது காலில் ஏதேனும் ஊனம் இருக்கலாமோ, அல்லது குதிகாலில் கல், முள் குத்தியிருக்குமோ, அல்லது இடுப்பில் ஏதேனும் பிடிப்பு இருக்கலாமோ என்று அவர் எண்ணிப் பார்க்கும் போதுதான் அவள் பின்னங் காலில் ஜோடு அணிந்திருப்பது தெரிந்தது. வித்துவானின் முகம் சுண்டியது. தமக்கு முன் ஒருவர் காலில் செருப்புடன் வருவதை அவர் விரும்பவில்லையோ, அல்லது இல்லாளாக வரப் போகிறவள் முதலில் செருப்புடன் காட்சி அளிப்பது அவருக்குப் பிடிக்கவில்லையோ, அல்லது நடு வீட்டுக்குள் ஒரு நங்கை நடையனுடன் வருவதை அவர் வெறுத்தாரோ என்னவோ, அவர் முகத்திலிருந்த வாட்டம் உடனே புன்சிரிப்பாக மாறியது. மனம் பலவித யோசனைகளில் ஈடுபட்டது. 'இவள் வேண்டுமென்றே நிமிர்ந்து நடக்க வகை செய்து கொண்டிருக்கிறாள். இவள் கணவனையும் வணங்க மாட்டாள். கட்டை விரலைப் பார்த்து நடப்பது, பிறரைக் கண்டவுடன் தலை குனிந்து போகவது இவை ஆணுக்குப் பொருந்தாது. ஆனால் அணங்குக்கு அழகு செய்யுமே? நங்கையின் பேரழகே நாணம்தான். இவள் அருகில் வரவே வெட்கம் வெட்கப்படுகிறதே? காவேரிக் கரையிலே நாணல்கள் நிரம்பி யிருக்கும். அவை தலைகளில் வெண்ணிற மலர்களை வைத்துக் கொண்டு காற்று அதைத் தொட வந்தால் வெட்கத்தால் தலை குனிந்து காவிரியைத் தொட்டுச் சிறிது நேரம் வெட்கத்தோடு தலை தூக்காமல் இருந்து பிறகு மெல்லத் தலை நிமிரும். காவிரியின் நாணம்தான் அதுவோ! அதனால்தான் நாணல் என்று காரணப் பெயர் பெற்றதோ ! அணங்குகளின் நாணம் மட்டுமல்ல; ஆற்றங்கரை நாணல்கூட அழகுதான். சே, இவள் யார் சொல்லைக் கேட்டோ, அந்த அழகை இழந்து விட்டாளே. மறுவற்ற வானத்தில் இருக்கிற பூரண சந்திரனைக் காட்டிலும், மேக சஞ்சாரத்தின் அடியில் அடிக்கடி முகம் காட்டும் முழுமதி அதிக அழகுடையது. இவள் முகம் எப்பொழுதும் தெரிந்து கொண்டிருக்குமே. குனிந்து நிமிராத முகமும், கூரை மேல் காய்த்த சுரைக்காயும் ஒன்றுதான்' என்று அவர் எண்ணிய பொழுது அவள் தன் காலால் 'டக் டக்' என்று தட்டினாள். வித்துவான் திடுக்கிட்டு நிமிர்ந்தார். ''நான் உள்ளே வரலாமா?'' என்று மேல் நாட்டு முறையில் ஒரு கேள்வியைக் கேட்டாள். இதற்கும் அவருக்குச் சிரிப்புத்தான் வந்தது. வாசற்படி வரையில் வந்தாகிவிட்டது. 'இனி உள்ளே வரலாமா என்று ஒரு கேள்வியா?' என்று மனத்துக்குள் எண்ணினார். ஆயினும், ''வருக, வருக! இப்படி உட்காருங்கள்'' என்று எழுந்து நின்று வரவேற்று, தமக்கு எதிரில் இருந்த நாற்காலியைக் காட்டினார்.

''நான் இங்கு உட்கார வரவில்லை. உம்மை ஒரு கேள்வி கேட்க வந்தேன்'' என்று சொல்லிவிட்டு நின்றபடியே தலையை நிமிர்த்தி அந்த அறையின்

உத்திரங்களை ஒரு முறை நோக்கினுள் அவள். இதைக் கண்ட வித்துவான் கிண்டலாக, ''இங்கு ஒழுகவே இல்லை. நேற்று இரவு கூட நன்றாக மழை பெய்தது'' என்றார்.

''உம்மிடம் நான் அதைப் பற்றிக் கேட்டேனு ?''

''இல்லை, உயரப் பார்த்தீர்களே! ஓடு சரியாக இருக்கிறதா, ஒட்டடை அடிக்க வேண்டுமா என்றுதான் அறையைச் சரிபார்க்கிறீர்களோ என்று எண்ணினேன்.''

''உயரப் பார்க்காமல் உமது முகத்தையா பார்ப்பார்கள்?'' என்றாள் கோபத்தோடு.

''நான் சொல்வேனு அப்படி ? தாங்கள் வந்த விஷயம்?''

''இந்த வித்துவான்களுக்கே பிறரை மதிக்கத் தெரியாதா என்று கேட்கத் தான் வந்தேன்.''

''இந்தக் கேள்வியை என்னிடம் கேட்பானேன் ?''

''நேற்று நீர் நூற்றுக்கால் மண்டபத்தில் பாடினீர் அல்லவா ?'' என்று மமதையுடன் கேட்டாள்.

''பேசினதாக ஞாபகம் இல்லை.''

''அதிகப் பேச்சு. நீர் பாடும்போது இளவரசியார் அங்கு விஜயம் செய்தார்கள் அல்லவா?''

''திரை மறைவில் நடப்பதையெல்லாம் என்னல் தெரிந்து கொள்ள முடியுமா? அது அரசியோ, இளவரசியோ, ஆனு பெண்ணு எனக்குத் தெரியாது.'' இந்த இடும்பான பதிலில் அவள் ஆத்திரம் கொண்டாள்.

''பின்னே என்ன, உமக்கு முன்னுலே வந்து, 'மோகன முத்துரங்கம் அவர்களே, அடியாள் இளவரசி வணக்கம்' என்று சொல்ல வேண்டுமா?'' இப்படி இரு கைகளிலும் அஞ்சலி ஹஸ்தம் பிடித்து அடக்கமாக நின்று ஒரு நொடிப்பு நொடித்தாள் அவள். ஆனுல் முகத்தில் எள் வெடித்தது.

வித்துவான் சிரித்துக் கொண்டார். ''என்ன சிரிக்கிறீர்?''

''உங்கள் கால் ஜோடு வழுக்கி விடப் போகிறது.''

''அது என் சொந்த விஷயம். நான் பட்டிக்காட்டல்ல. நீர் இளவரசி வந்தவுடன் ஏன் பாட்டை நிறுத்தினீர் ?''

''நானுகப் பாடினேன். நானுக நிறுத்தினேன்!''

''ஏன் அவர்களை அவமானம் செய்ய வேண்டும் என்ற எண்ணம்தானே? நீர் ஒரு பாடகன். சன்மானத்துக்காகப் பாட வந்திருக்கிறீர். உமக்குத் தன்மானத்தைப் பற்றி என்ன கவலை? யாரிடம் பாடிப் பரிசு பெற வந்தீரோ, அவர்களையே அவமானம் செய்தால்?'' என்று கோபத்துடன் கேட்டாள் அந்த அணங்கு.

''நிறுத்து. அது எனக்கும் இளவரசிக்கும் இடையே உள்ள விஷயம். நீ யாரென்று தெரியாமல் நான் உன்னிடம் விடையளிப்பது தவறு'' என்று சாதுரியமாக மொழிந்தார் வித்துவான். இதைக் கேட்டுத் தோழியின் வேடத்தில் வந்த இளவரசி திடுக்கிட்டாள். அவளுடைய பேதமையில் இரண்டொரு கடும் சொற்கள் வெளி வந்தன.

''நான் யாராக இருந்தால் உமக்கென்ன? நான் இளவரசியின் தோழி.''

''பெயர் ?''

''பெயர்..... பெயர்....'' இளவரசி தயங்கினுள். பிறகு ''அரண்மனைச் செல்வி'' என்றாள்.

''ஸ்ரீமதி அரண்மனைச் செல்வி அவர்களே! நான் உமது இளவரசியிடம் பிச்சை கேட்க வரவில்லை. என் வித்தையைத் திருச்சியில் பிரகடனம் செய்ய வேண்டும் என்றுதான் வந்தேன். இங்கு மலைக் கோட்டையைச் சுற்றிலும் மகாவித்துவான்கள் பலர் இருக்கிறார்கள். நாயக்க மன்னர்களின் ஆஸ்



தான புலவர்களாக ஆனையாம்பட்டி, கரூர், ஈரோடு, சேலம், நாமக்கல், மதுரை, மணப்பாறை, திண்டுக்கல், திருப்பூர் முதலான ஊர்களில் பல மகா வித்துவான்கள் இருக்கிறார்கள். திருவரங்கத்திலும் திருமாலிருஞ்சோலையிலும் அற்புதமாக ஆடியும், பாடியும் அரங்கனைத் தொழும் அரையர்கள் இருக்கிறார்கள். கல்லிடைக் குறிச்சியிலும், அம்பாசமுத்திரத்திலும் எட்டயபுரத்திலும் உள்ள பெரும் இசைப் பேரறிஞர்கள் முன்னிலையில் என் இசைப் புலமையைக் காட்ட வேண்டும். அவர்கள் என்னை மெச்சிக் கொண்டாடி வாழ்த்த வேண்டும் என்ற ஆவலில்தான் இங்கு வந்தேன். உங்கள் அரசியைத் தேடி அல்ல. அவள் ஒரு நாட்டரசி. நானோ பாட்டரசன். நாட்டுக்கு எல்லை உண்டு. பாட்டுக்கு எல்லை இல்லை. உங்கள் இளவரசி தலையாட்டினால் எனக்கென்ன? ஆட்டாவிட்டால் எனக்கென்ன? அது ஒரு கற்றுக்குட்டி; அதிலும் தத்துக்கினி என்று தெரிந்தவுடன் பாட்டை நிறுத்தி விட்டேன். இந்த அரசு இல்லாவிட்டால் இன்னும் எத்தனையோ அரசுகள் நம்மை ஏற்கத் தயாராக இருக்கின்றன'' என்று கடகடவென்று மொழிந்தார் வித்துவான். எரிகிற தணலில் இன்னும் சிறிது சாம்பிராணியைப் போட்டதுபோல் கோபப் புகை அவள் முகத்தில் படர்ந்தது.

''எங்கள் அரசிக்கும் உங்கள் சங்கீதத்தைக் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்பதில்லை. பாட்டுத்தான் உம்மிடம் இல்லை. பண்பாவது இருக்கலாம். உமக்குத் தெரிந்தது ஒரு ராகம். அதற்கு ஏன் ஐயா இத்தனை வேகம்?'' என்று நகைத்தாள் நங்கை.

''என்ன ஒரு ராகமா ?''

''ஆமாம், மோகன முத்துரங்கம் தானே, உம் பெயர்?''

''உலகத்திலே ஒரே ஒரு ராகத்தை யாவது ஒழுங்காகப் பாடத் தெரியும் என்று ஒப்புக் கொண்டீர்களே! நான் பிறந்த பிறவிக்கு அதுவே பெரும் பயன். கர்நாடக இராகங்கள் ஒவ்வொன்றும் கடவுளின் உருவம். கல்லில் அடிக்காத சிற்பம். கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா ?''

''உம் !''

''அவர் உதட்டைச் சுவைக்கும் வாத்தியத்துக்கு என்ன பெயர் ?''

''புல்லாங்குழல்.''



''அதற்கு இன்னொரு பெயர் ?''

''முரளி.''

''ஏன், தயங்குகிறாய்? மோகன முரளி என்று சொல்லு. உலகமே அவரிடம் மயங்கியது. பசுவும் பாம்பும் மயங்கின. ஆறும் குளமும் அசையாமல் கேட்டன. ஆணும் பெண்ணும் தங்களை மறந்தார்கள் என்றால் என்ன அர்த்தம் ?''

''அதில் ஒரு மோகன சக்தி இருந்தது என்று அர்த்தம்.''

''மோகன சக்தி என்ன? மோகன இராகத்தில் இசைத்தார் என்று சொல். அவர் வாசித்த இராகம் மோகனமாகத்தான் இருக்கவேண்டும்!''

''நீங்களும்தான் மோகனம் பாடினீங்க. எங்க இளவரசி மயங்கவில்லையே?'' என்று அவரையே பார்த்தாள் அரண்மனைச் செல்வி.

''அவள் மயங்கினளோ, மயங்கவில்லையோ, அது அவளுக்குத்தானே தெரியும் ? உனக்கு எப்படித் தெரியும்? இல்லை; ஞானசூன்யமாக இருக்கலாம்'' என்று அவளைக் கேலியாகப் பார்த்தார் இளவரசர்.

''மோகன இராகம் அவர்களுக்குப் பிடிக்கா விட்டால் ?''

''அது எப்படிப் பிடிக்காமல் போகும்? ராகங்களைப் பற்றி மேலும் சொல்கிறேன் கேள். தஞ்சாவூரிலே வேங்கடமகி என்று ஒருவர் இருந்தார். அவர் மேளகர்த்தா இராகங்களைக் கண்டு பிடித்தார். இப்பொழுது ஓர் உதாரணம் சொல்கிறேன். நீ அழகாய் இருக்கிறாய்; கலையில் புலி என்று வைத்துக் கொள்.''

''நான் அழகாயிருக்கிறேனா?'' என்று ஆசையுடன் கேட்டாள் அரண்மனைச் செல்வி.

உடனே இடைமறித்தார் வித்துவான். ''நான் அப்படிச் சொல்லிவிடுவேனா ? உன் குதிரை வால் குடுமியும், கோணல் வகிடும், குதியங்கால் ஜோடும் நீ நிமிர்ந்து நிற்கிற நிலையும் உனக்கு வேண்டும் என்றால் அழகாய் இருக்கலாம்....''

''என் அழகுக்கு உங்கள் அத்தாட்சிப் பத்திரம் தேவையில்லை. உம், சொல்லுங்கள்.''

''அழகாய் இருக்கிறாய் என்று வைத்துக் கொள். உன்னை ஒருவன் பார்த்தான். இந்த உத்தமி யார் ? யாருடைய மகள் என்று விசாரித்தான். தாயார் தகப்பனார் இன்னார் என்று தெரிய வந்தது. அதைப் போல் மேளகர்த்தாக்களைக் கண்டுபிடிப்பதற்கு முன்னாலேயே மோகனம் பிரபலமாக இருந்தது. அதன் இசையில் உலகமே மயங்கிக் கிடந்தது. அதைக் கொண்டுதான் அவளைப்பற்றி யார் என்ன எங்கே பிறந்தாள் என்று ஆராய்ந்து இவள் தீர சங்கராபரணத்தின் 'ஜன்யம்' என்று கண்டுபிடித்தார் வேங்கடமகி. அவளாலே பிறந்த வீட்டுக்குப் பெருமை. புகுந்த வீட்டுக்குப் பெருமை. கர்நாடக சங்கீதத்துக்குப் பெருமை. நீயும் பிறந்திருக்கிறாயே?'' என்றார் முத்துரங்கம். அரண்மனைச் செல்வியின் முகம் மாறியது. ஆத்திரம் சீறிக் கொண்டு வந்தது.

''அட போய்யா! ஓர் இராகத்தைத் தெரிந்து வைத்துக் கொண்டு ஊர்க்கதை யெல்லாம் அளக்கிறாய்.''

''ஓர் இராகத்தை ஒழுங்காகப் பாடவே ஒரு மனித ஆயுள் போதாதம்மா. இதையெல்லாம் உன்னிடம் வந்து சொல்கிறேன் பாரு. உனக்குப் பாடவும் தெரியாது. ஆடவும் தெரியாது'' என்று சொல்லிவிட்டு அவள் பாதங்களில் தெரிந்த தங்கப் பாத சரத்தைப் பார்த்தன அவர் கண்கள்.

''எனக்குப் பாடவும் தெரியும். ஆடவும் தெரியும். ஆனால் கலையத்திலே கற்களைப் போட்டுக் கடாபுடா என்று உருட்டுகிற கர்நாடக சங்கீதம் இல்லை.''

''தேசிதான் பாடுவாயோ? இந்துஸ்தானி சங்கீதமா? கொஞ்சம் பெகாக் பாடேன்.''

''அதிலெல்லாம் எனக்கு அக்கறை இல்லை. உங்க கர்நாடக சங்கீதமும் எனக்குப் பிடிக்காது. அரைச்ச மாவையே திரும்ப அரைக்கக்கிட்டு... அடாணாவையும், சகாணாவையும் அழுதுக்கிட்டு இருப்பீங்க. இந்தக் கர்நாடக சங்கீதம் கர்ண கொடூரம். நான் பாடுவது ரம்பா, ஜாஸ், வால்ட்ஸ்.

''ஓகோ, ஐரோப்பிய சங்கீதமா ?'' என்று வியப்புடன் கேட்டார் வித்வான்.

''என்ன விழிக்கிறீர்? பெயரெல்லாம் புதிசாயிருக்கா? இதுவெல்லாம் உங்க கர்நாடக சங்கீதத்திலே உண்டா?''

''கற்பக விருட்சத்திலே பூ உண்டா, இலை உண்டா என்று கேட்கிறாயே? உலகத்திலே உள்ள அத்தனை சங்கீதமும் அதில் உண்டு. எங்கே கொஞ்சம் பாடு.''

''நான் பாடுவதென்றால் அதற்கு ஒரு பேஸ் வயலின், டாப் வயலின், கிளாரினெட் டபிள் பேஸ், ஆர்கன், பியானோ, கிட்டில் டிரம், ஜாஸ், ஸிம்பல், ஹார்ப் எல்லாம் வேண்டும்.''

''சே, பாட்டு ஒன்று. பக்கவாத்தியம் நூறு ?''

''உங்க சங்கீதத்லெ த எழுத முடியுமா ?''

''இது எழுத்துக்களில் அடங்காது.''

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

**சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!**






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தென்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**காட்பரிஸ் போர்ன்விடா**

3226A-Tm.

''எழுதாவிட்டால எப்படி எல்லோரும் பாடுவது ?''

''எல்லோரும் பாடினால் யார் கேட்பது ? சிலரால்தான் பாட முடியும். சிலரால்தான் கேட்க முடியும். அதுதான் உயர்ந்த கலை. சிலருக்குப் பக்திப் பாட்டுப் பிடிக்கும். வேறு சிலருக்கு நாடகப் பாட்டுப் பிடிக்கும்.''

''பக்திப் பாட்டே அவசியமில்லை.''

''பாட்டில்லாத பக்தியில் சாராம்சம் குறைவு. பக்தியில்லாத பாட்டும் அப்படியே! ஆடியும் பாடியும்தான் இறைவனைத் தொழுவது நம் வழக்கம்.''

''என்னய்யா, ஆட்டமாம், பாட்டாம். இருப்பதே நான்கு வாத்தியங்கள். மத்தளம், குழல் வீணை, பானை. இந்த நாலுக்குள் உங்கள் சங்கீதம் அடங்கிவிடும்.''

''உலகமே இந்த நாலுக்குள்தான் இருக்கிறது. மிருதங்கம்தான் இந்தச் சரீரம். குழல்தான் மூச்சு. வீணைதான் நரம்பு போர்த்த உடல் — பானைதான் நாதம். இந்த நாலும் உண்டாக்குகிற சத்தத்தை நானூறு வாத்தியங்களில் உண்டாக்கிப் பயன் என்ன? சத்தமெல்லாம் சங்கீதம் அல்ல ; சுத்தம்தான் சங்கீதம் !''

''அப்படி அல்ல. எங்கள் சங்கீதத்தில் டிரம் அடித்தால் வீரம் வரும். வால்ட்ஸ் வாசித்தால் காதல் வரும். கிளாரினெட் வாசித்தால் துன்பம் வரும்.''

'' இவ்வளவுதானே !..... நாங்கள் அமிருதவர்ஷிணி பாடினால் மழை வரும். இசையில் பாம்பு வரும். பகவானே நேரில் வருவார்.''

''இதெல்லாம் மூடநம்பிக்கைகள்.''

'' மூடர்களுக்கு அப்படித்தான் தோன்றும்.''

காலால் தரையில் உதைத்தாள் அரண்மனைச் செல்வி.

''அப்படியானால் நான் மூடமதியா? என்னோடு ஆட முடியுமா?'' என்று வித்வானை நோக்கி ரத்தம் தெறிக்கும் கண்களுடன் ஒரு கேள்வியைக் கேட்டாள் அவள். வித்துவானின் முகம் சிவந்தது.

''நான் ஆட வேண்டுமா ? தெருவில் திரியும் ஒரு பெண்ணைக் கொண்டே உன்னை ஆட்டத்தில் வெல்வேன்.''

''சரி பார்ப்போம்.''

''எப்ப ?''

''நவராத்திரி தர்பாரின் போது.''

'' எங்கே ?''

''நாயக்கர் தர்பாரில் நடக்கும் கலை விழாவில்.''

''இப்போது இவ்விதம் பேசிவிட்டு அப்போது நீ ஓடி விட்டால்?''



'' நானும் பார்க்கிறேன் இரண்டு நாளாக இப்படி நடுத்தெருவிலேயே நின்று கொண்டிருக்கிறீர்களே, என்ன சங்கதி ?''

'' வீட்டுக்குப் போனால் ஆபீஸ் நினைவு. ஆபீஸுக்குப் போனால் வீட்டு நினைவு. எந்த இடத்துக்குப் போனாலும் நிம்மதியா வேலை செய்ய முடியல்லே !''

''நீங்கள் ஓடாமல் இருந்தால் போதும்.''

''ஒப்புக் கொண்டேன்.''

''சரி.''

புறப்பட்டாள் அவள்.

''செல்வி! இரவு பத்து நாழிகை இருக்கும் போலிருக்கிறதே; தனியாகப் போவாயா ? துணைக்கு யாரையாவது அனுப்பவா ?''

''ஏன், என்னைப் பட்டிக்காட்டுப் பெண் என்று பார்த்திரா ? பேய் பிசாசுகள் எல்லாம் என்னிடம் நெருங்கவே பயப்படும்.''

''உண்மைதான். அவைகளும் ரஸிக்கத் தெரிந்தவர்களைத்தான் நாடும்.''

''வருகிறேன்'' என்று விருட்டென்று நடந்தாள் அரண்மனைச் செல்வி.

இதைப் பார்த்துக் கடகடவென்று நகைத்தார் வித்துவான். உடனே, அவரது வீணையைக் கையில் எடுத்தார். புன்னாகவராளி ராகம் கிளம்பியது.

பன்னீர் மலர்கள் மலர்ந்தன. மனோரஞ்சித மலர்கள் மலர்ந்து வாடை வீசியது. மகிழ மரத்தின் அரும்புகள் பொலபொல வென்று முகை நெகிழ்ந்து மழை பொழிந்தன.

கோபமாகச் சென்ற அரண்மனைச் செல்வியின் கால்களை அவை நிறுத்தின. ''டக்'' என்று நின்றாள். மாடியையே பார்த்தாள்.

''சீ!'' என்றான். ''இது என்ன ராகம்? கர்நாடகம். நன்றாகவா இருக்கிறது?'' என்று கேட்டுக் கொண்டாள். ஆனால் அப்படியே நின்றாள். அவளை மந்திரம்போல் இசை இழுத்தது.

'பாட்டா, அவனா, அழகா, கலையா, இசையா? வீணையா? எது என்னை இழுக்கிறது?' என்று நினைத்தாள்.

அப்போது பளபளவென்று ஏதோ ஒன்று பளிங்குப்படிக்கட்டின்மேல் தெரிந்தது. கவனித்தாள். அது தலையை உயரத் தூக்கி ஆட்டியபடி பாட்டை ரசித்தது. அவளும் தலையை ஆட்டிக் கொண்டு நின்றாள். அது மேலும் இசை வந்த இடத்தை நோக்கி நகர்ந்தது; நெளிந்தது. அவள் மனத்தில் ஏதோ ஒரு பயம். வந்தது போல் போய்விடுவோம் என்று திரும்பினாள். அம்மம்மா! அவள் கண்ட காட்சி! ''அம்மா!'' என்று ஒரு குரல் அவள் வாயிலிருந்து வெளியே வந்தது. அந்த இடத்தில் ஒரு நல்ல பாம்பு படம் விரித்து ஆடிக் கொண்டிருந்தது; இல்லை, கட்செவியாகிய பாம்பு தன் காதுகள் இரண்டையும் அகல விரித்துக் கொண்டு ஆடாமல், அசையாமல் நின்றது. அவளும் நின்றாள். அப்படியே ஆடாமல் அசையாமல் தானும் நின்றாள். ஈசனின் ஒலி உருவம்தானே இசை? அவளையும் அது மயக்கியது. சிலைபோல் நின்றாள், மதுர கீதத்திலே மயங்கிய மங்கை. 'சே... நாம் காட்டுவிலங்கல்ல. கறவைப் பசுவல்ல. கைக் குழந்தை தானுமல்ல. பாட்டின் சுவை அறியப் பாம்புமல்ல. நான் மனித இனம். பகுத்தறிவற்ற பாம்பு சும்மா மயங்கி இருக்கலாம். மனித மனம் மாநாகத்தையும்விடக் கொடியது. சே... இவன் இசையில் நானும் மயங்கிவிட்டால் இளவரசி ஆவேனா?'

இந்த இறுமாப்புக்கு முன் எவரால் நிற்க முடியும்? இசை இரும்பை உருக்கலாம். எண்ணற்ற ஜீவகோடிகளை மயக்கலாம். இறைவனையும் ஆட்டி வைக்கலாம். இறுமாப்பின் முன் இசையால் எதிர்த்து நிற்க முடியுமா? அவளது குதியங்கால் ஜோடுகள் 'டக் டக்' என்று அரண்மனையை நோக்கி நடந்தன. பாவை விரைந்தாள். பாம்பு நகரவில்லை. அது நல்ல பாம்பு.

தன்னை மறந்து புன்னாகவராளியை இசைத்துக் கொண்டிருந்த மோகன முத்துரங்கம் திடீரென்று வீணையை நிறுத்தினார். அவர் உடல் திடீரென்று வியர்த்தது. அவரையறியாமல் ஏதோ ஓர் அச்சம் அவரைப் பிடித்து உலுக்கியது. இசையைக் கேட்டுக் கொண்டு தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்த பாம்புகளில் ஏதேனும் ஒன்று பலகணி வழியே அங்கு நுழைந்திருக்குமோ? வித்துவானின் அச்சத்துக்கு அதுதான் காரணமோ என்று பார்த்தால் அப்படி ஒன்றும் இல்லை. அவர் அரவத்துக்கு அஞ்சவில்லை. அணங்குக்கு அஞ்சினார். அவள் கோபித்துக் கொண்டு சென்ற வேகத்தில் எதையும் செய்வாள். சித்ராங்கியின் சீற்றம் சாரங்கதரனைப் படுத்திய பாட்டைப் போல் இவள் கோபத்தில் என்ன பாடுபடுத்துவாளோ என்று எண்ணினார். அவர் மனம் பல கோணங்களில் கரகரவென்று சுழன்றது. அவள் பெண். நானோ ஆண். பெண்களின் மனம் மலரைக் காட்டிலும் மென்மையானது. அதே சமயத்தில் வைரத்தைக் காட்டிலும் வலிமை உடையது. பெண் மனம் வெண்ணெய் போல் உருகுவதும் உண்டு. பொன்னைப் போல் அத்தனை உலோகங்களைக் காட்டிலும் மென்மையானதும் அதுதான். என்னை யாரோ ஒரு வித்துவான் என்று எண்ணிக் கொண்டு இந்தமட்டோடு அவள் விட்டு விட்டாள். தஞ்சை இளவரசன் என்று தெரிந்திருந்தால் இங்கேயே சிறை வைத்திருப்பாள். அதிலும் அவளை மணம் புரிந்து கொள்ளலாமா வேண்டாமா என்பதற்காகவே அவளைப் பரிசோதிக்க மாறு வேடத்தில் வந்தேன் என்று அவள் அறிந்தால் அடேயப்பா! எத்தனை பெரிய ஆபத்து வந்துவிடும்? நமது சிறுபிள்ளைத்தனத்தால் இருநாட்டுக்கும் பகையே வந்துவிடலாம். அவள் அரண்மனைக்குப் போய்ச் சேர்வதற்குள் நாம் இந்த இடத்தைவிட்டு நீங்கிவிடவேண்டும் என்று துடித்தார் இளவரசர். நள்ளிரவிலே ஒரு சிறு பரிசில் காவிரியின் மீது இருக்காட்டுப் பள்ளியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. வித்துவான் முத்துரங்கத்தின் வெற்றிலைப் பெட்டியும், தம்பூரும் வசந்த மாளிகையில் அவர் அறையில் இருந்தன. ஆனால் இளவரசர் பிரதாபசிம்மரும் அவருடைய நண்பர்களும் காவிரியில் பரிசிலில் கனவேகத்துடன் தஞ்சையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

ஃ ஃ ஃ

திருவலஞ்சுழியில் விநாயகப் பெருமானை வலம் வந்து சாமிமலையின் ஞான பண்டிதனுக்குக் காவடி எடுத்தனர் குயிலியும் அவள் கூட்டத்தினரும். பஞ்சவர்ணத்திடம் சிக்காமலிருக்கவே அவர்கள் இங்கே ஓடிவந்துவிட்டனர். **(தொடரும்)**

''உங்களுக்குப் பிழைக்கத் தெரியுமா?''

''பிழைக்கத் தெரியாமலா இருக்கிறேன்? இல்லே, பட்டினி கிடக்கிறேனு?''

''இல்லே, உங்களுக்குப் பிழைக்கத் தெரியுமான்னு கேட்கிறேன்?'' சற்று அழுத்தமாகச் சொன்னுள்.

''உன்னைப் பட்டினியா போட்டிருக்கேன்? வேளா வேளைக்கு விரும்பியதைச் சாப்பிடுகிறய்? வேறு எதில்தான் குறை வைத்திருக்கேன்...?''

''கொடுக்கத் தெரியும்; வாங்கத் தெரியாது. நீங்கள் எக்கேடும் கெட்டுப் போங்கள். எனக்கு என்ன வந்தது?'' என்றவள் முகவாயைத் தோளில் இடித்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

எனக்குச் சற்று இளகிய மனம். சிலர் அதை, நான் அப்பாவி என்று நினைத்துப் பல சலுகைகள் பெற்றுச் சென்று விட்டனர். பொருளாதாரத் துறையைப் பொறுத்த வரைக்கும் ஒரு பெருந் தொகையை இழந்து விட்டேன். நான் அப்படிச் செய்வது என் மனைவிக்குப் பிடிக்காது. ஆபீசில் ஐந்து, பத்து கைமாற்று கொடுத்து விட்டு, பிறகு அவைகளைச் செலவுக் கணக்கில் எழுதுவது அவளுக்குத் தெரியாது.

இந்த உலகத்தில் சிலர் 'ஒன்வே டிராபிக்'காக இருக்கிறர்கள். அதாவது வாங்குவார்களே தவிர, திருப்பிக் கொடுக்க மாட்டார்கள்.

எங்கள் வீட்டுக்கு இரண்டு வீடுகள் தள்ளி ஒருவர் குடியிருந்தார். தங்கமான மனிதர். அவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்று ஒரு வருஷத்துக்கு மேலாகி விட்டது. அங்கே அல்லி தர்பார் நடந்து கொண்டிருந்தது. அவர் வேலையில் இருந்த காலத்திலும் கூட மூக்குப்பொடிக்குத் தேவையானல், மனைவியிடம் கைநீட்ட வேண்டும். அந்த வீட்டு அம்மாளைக் கேட்காமல் ஒரு துரும்பைக் கூட அங்கே யாரும் அசைக்க முடியாது.

ஐந்து பெண்கள்; இரண்டு பையன்கள். மூத்த இரண்டு பெண்களுக்கும் திருமணமாகிவிட்டது. பையன்களில் ஒருவன் பட்டணத்தில் அரசாங்க ஜீப் டிரைவராக இருக்கிறன். இன்னொருவன் எஸ். எஸ். எல். ஸி. யில் மூன்று தடவைகள் வழுக்கி விழுந்து விட்டு, அச்சகம் ஒன்றில் 'கம்போஸிங்' கற்றுக்கொண்டிருக்கிறன்.

மூன்றாவது பெண் ஆசிரியைப் பயிற்சி முடித்துவிட்டு வீட்டில் இருக்கிறள். அவளுக்கு இளையவர்கள் இருவரும் உயர் நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிறர்கள்.

அந்தக் குடும்பம் நடுத்தரக் குடும்பமானலும், அந்த அம்மாவின் தொடர்புகள் எல்லாம் பெரிய இடங்களில்.

கிராமத்திலிருந்து சாப்பாட்டுக்கு நெல் வந்துவிடும். அவர் வேலை பார்ப்பது வரைக்கும் கஷ்டமில்லாமல் இருந்தது. இப்போது சற்றுச் சிரமம். பையன் பணம் அனுப்புவதில்லை. அவருக்குக் கிடைக்கும் 'பென்ஷன்' தொகையில் குடும்பத்தை ஓட்ட வேண்டும்.

ஒரு நாள் அந்த அம்மா என்னிடம் வந்து, ''தம்பி! பத்மாவுக்கு ஒரு பள்ளிக்கூடத்தில் வேலை கொடுப்பதாகச் சொல்றாங்க. அதுக்கு ஐந்நூறு ரூபாய் கொடுக்கணுமாம்'' என்றுள்.

''இப்போது தனியார் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கும் அரசாங்கம் தானே சம்பளம் கொடுக்கிறது. இதற்கு நாம் ஏன் பணம் கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டேன்.

''என்னவோ, தம்பி! பணம் தந்தால்தான் வேலை கிடைக்குமாம்.''



# கடன் கொடுத்தார் நெஞ்சம்....

வனமாலிகை

அரசாங்கத்தைத், தனியார் பள்ளி நிர்வாகிகள் படுத்தும் பாட்டை நினைத்துக் கொண்டேன்.

''அவருக்கு அடுத்த மாதம் 'பிராவிடண்ட் பணம்' வந்துவிடும்'' என்றாள்.

''அப்போது கொடுத்தால் போதுமே?''

''இல்லே தம்பி. பணம் கொடுத்துத்தான் அப்பாயின்ட்மென்ட் ஆர்டர் வாங்கணுமாம். இந்த வேலைக்கே ஐந்நாறு பேர்கள் போட்டி.''

''அதுக்கு என்னே என்ன பண்ணச் சொல்றீங்க?''

''உங்களைத்தான் தம்பி வந்திருக்கிறேன். கைமாற்று ஐந்நூறு ரூபாய் கொடுத்து உதவுங்க. அடுத்த மாசம் வட்டியோட திருப்பிக் கொடுத்து விடுகிறேன்.''

ஐந்து பத்து என்றால் யோசிக்காமல் கொடுத்து விடலாம். நான் யோசிக்கத் தொடங்கினேன்.

''இதிலே ஒண்ணும் யோசிக்காதீங்க தம்பி! எங்க குடும்பம் இருக்கிற நிலைமை உங்களுக்கு நல்லாத் தெரியும். அந்தப் பொண்ணு வேலே பார்த்து, நானு காசு சேர்த்து வைச்சாத்தான் அதுக்கு நாளைக்குக் கல்யாணம் நடக்கும்.''

பெற்ற பாசம் நிழலிட்டது.

அதைக் கேட்டதும் என்னுடைய இதயம் இளகி விட்டது.

''சாயங்காலம் ஆபீசிலிருந்து வர்றபோது கொடுத்து விடுகிறேன்'' என்றேன்.

பத்மாவும் வேலைக்குப் போய் இரண்டு மாதங்கள் சம்பளம் வாங்கி விட்டாள். அவருக்கும் பிராவிடென்ட் பணம் வந்து விட்டதாம்.

''பத்மாவுக்குப் புதிசா அவ அம்மா ஒரு 'புபுக்கூடு' மாலே வாங்கியிருக்காள்'' என்றாள் என் மனைவி.

''சம்பளத்தில் ஏதாவது மிச்சம் பிடித்திருப்பாள்'' என்றேன். வேலைக்குச் செல்கிறவள் ஊளிக் கழுத்துடன் செல்லலாமா?

''அதுதான் இல்லே; பிராவிடண்ட் பணத்திலிருந்து வாங்கினளாம்.''

''அதுவும் வாங்க வேண்டியது தானே?''

''நமக்கு இன்னும் பணத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லேயே? நீங்க ஒரு வார்த்தை கேட்கக் கூடாதா என்ன?''

''திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று அவர்களுக்குத் தெரியாதா, என்ன?''

''தெரிந்திருந்தால் இதற்குள் கொடுத்திருப்பார்களே?''

நான் யாருக்காவது கடன் கொடுத்து விட்டுத் திருப்பிக் கேட்ப தில்லே. அவர்களாகக் கொடுக்கும் போதுதான் பெற்றுக் கொள்வேன்.

இந்தச் சமயத்தில்தான் என் மனைவி 'உங்களுக்குப் பிழைக்கத் தெரியாது' என்ற குற்றச்சாட்டை என் மீது சுமத்தினாள்.

பிராவிடண்ட் பணம் வந்ததிலிருந்து அந்த அம்மா வழியில் எங்காவது என்னைப் பார்த்தால் பார்க்காதது மாதிரிப் போய் விடுவாள். நான் உள்ளுக்குள் சிரித்துக் கொள்வேன். அதற்கு முன்பெல்லாம் எங்கே பார்த்தாலும், ''என்ன தம்பி, சௌக்கியமா? ஆபீசுக்கா?'' என்று கேட்பாள்.

அன்றைக்கு அவள் என் மனைவியுடன் வீட்டின் முன்பக்கத்தில் பேசியது என் காதில் விழுந்தது.

''ஏண்டியம்மா, நாங்க ஊரை விட்டா ஓடிப் போயிடப் போறோம்? பள்ளிக்கூடம் போயிட்டு வர்ற வழியிலே என் சின்னப் பொண்ணுகிட்டப் பணம் கேட்டியாமே? இது நல்லா இருக்கா? கொடுக்கல் வாங்கல் எல்லாம் பெரியவர்கள் அறிஞ்சால் மட்டும் போதும். சிறிசுகளிடம் சொல்லலாமா? என்ன இருந்தாலும் நீ அவகிட்டக் கேட்டது தப்பு'' என்றாள்.

அவள் குரலைக் கேட்டு நான் வெளியே வந்தேன். என் தலை தெரிந்ததும் பேச்சை அத்துடன் நிறுத்திக் கொண்டு அந்தம்மாள் போய் விட்டாள்.

கையில் சிலம்பேந்தி, மதுரை மன்னனிடம் வழக்குரைத்த கண்ணகியை நான் பார்த்த தில்லை. ஆனால் கையில் கரண்டியுடன் கண்களில் தீப்பொறியோடு என்னிடம் வாதிட்ட என் மனைவியை அன்று பார்த்தேன்.

என்ன இருந்தாலும் அந்த அம்மா வீடு தேடிவந்து அப்படிப் பேசியிருக்க வேண்டாம். அவளிடம் வாய் கொடுத்துவிட்டுத் தப்பியவர்கள் அந்தத் தெருவில் இல்லை. அவளை





''உங்கள் பாங்கியிலே திருட்டுப் போய்விட்டது என்று டெலிபோன் செய்தீர்களே! என்ன போச்சு?''

'''திருடர்கள் ஜாக்கிரதை' என்று எழுதி வச்சிருந்த போர்டைக் காணோம்!''

---

மறைமுகமாக எல்லோரும் காளியாத்தா என்றே அழைப்பார்கள்.

இரண்டு பெண்கள் படித்துக் கரையேற வேண்டும். மூன்று பெண்களுக்குத் திருமணம் நடக்க வேண்டும். திடீரென்று ஏதாவது செலவுகள் ஏற்பட்டிருக்கலாம். வசதிப்படும்போது அவன் திருப்பிக் கொடுக்காமலா இருப்பான்?

ஒரு பெண் வேலை பார்த்து அதன் பிறகு அவள் திருமணம் நடைபெற வேண்டும். இப்படி ஒரு நல்ல காரியத்துக்குக் கொடுத்த திருப்தி எனக்கு ஏற்பட்டது.

* * *

ஒரு வருடம் ஓடி விட்டது.

செட்டியார் கடையினுள் உட்கார்ந்து அவர் மகனோடு பேசிக் கொண்டிருந்தேன். கடையின் முன் பக்கம் அந்த அம்மா செட்டியாருடன் பேசுவது என் காதில் விழுந்தது.

''செட்டியாரே! பத்மாவுக்குக் கல்யாணம் நிச்சயமாயிட்டுது. மாப்பிள்ளை 'செக்ஷன் ஆபீசர்.''

''தேவலையே! எவ்வளவு கொடுக்கிறீங்க?''

''அதுக்கெல்லாம் நம்மகிட்டப் பணம் ஏது? பத்மாவின் அழகைப் பார்த்தே சம்மதிச்சுட்டாங்க. நான் நகை போட்டால் போதும்.''

''அப்படியா?''

''ஒரு செக்ஷன் ஆபீஸர் சம்சாரம்னு நாலு பேர் மதிக்கிறாப்போல் நகை நட்டு செய்து போடணும். இப்போ இருக்கிற தங்க விலையில் குறைஞ்சது ஒரு மூவாயிரத்துக் காவது....''

''ஆமா, ஆமா...''

''உங்களைப்போல் நாலு பேரை நம்பித்தான் கல்யாணத் தேதியும் வச்சிட்டோம். ஏதோ நீங்களும் முடிஞ்ச அளவுக்குக் கடன் கொடுத்து உதவணும்.''

''தங்கக் கட்டுப்பாடு காலத்திலே அப்படியெல்லாம் முடியுங்களா? மேலும் வியாபாரத்திலே இப்பவெல்லாம் பலவிதத்திலேயும் தொந்தரவுகள் இருக்கு. ரொம்ப நெருக்கடி. நிர்ப்பந்தங்கள் அதிகம். நீங்க என்னை மன்னிக்கணும்.''

''அப்படி முகத்திலே அறையற மாதிரி சொல்லிடாதீங்க. என்மேல் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா என்ன? நாங்க என்ன ஊரை விட்டா ஓடிப்போயிடப் போறோம்?''

''அதுக்கு இல்லீங்க. இப்போது வியாபாரமே நின்னுபோச்சு. அதிகாரிகள் கெடுபிடி வேறே. இதிலே நாங்க செய்யறதுக்கு ஒண்ணுமில்லே. உங்க தெருவிலே... இருக்காரே. அவர் கிட்டச் சொன்னா இந்த மாதிரி நல்ல காரியங்களுக்கெல்லாம் உதவி செய்வார்!'' என்று சொன்னார் செட்டியார்.

அடியேன் திருநாமத்தைத்தான் அவர் சொன்னார்.

''நமக்கெல்லாம் எங்கே கொடுப்பான்? வாலிபப் பொண்ணுங்க மினுக்கிக்கிட்டுப் போய்க் கேட்டா அள்ளிக் கொடுப்பான். அந்த அயோக்கியன்...''

இதைக் கேட்டதும் என் இரத்த நாளங்கள் புடைத்தன. 'விர்'ரென்று வெளியே வந்தேன். என்னைக் கண்டதும் அவள் முகம் பேயறைந்தாற்போலாகி விட்டது. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

''என்ன சொன்னீங்க? நான் அப்படி எவளுக்குக் கொடுத்திருக்கேன்?''

''......''

''பத்மாவுக்கு வேலைக்குன்னு சொல்லி ஐந்நூறு ரூபாய் கடன் வாங்கி வருஷம் ஒன்று முடியறது. அப்போ கடன் வாங்க வந்தபோது பத்மாவையா மினுக்கிக்கிட்டு வரச் சொன்னீங்க?''

என் நடத்தையை இழிவாகப் பேசிய அவளைக் கொன்றுவிடலாம் போலிருந்தது.

''வாயை மூடு ஐயா, யாருக்கு ஐந்நூறு ரூபாய் கொடுத்தாய்? வெறுங் கையிலே யாராவது கொடுப்பாங்களா? நாங்க பணம் வாங்கியதுக்கு என்ன 'ரிக்கார்டு' இருக்கு? மானமா வாழற எங்களைப் பற்றி அவதூறு சொல்ற உன்னை என்ன செய்யணும் தெரியுமா?'' அவள் காளியாத்தா ரூபம் பூண்டு விட்டாள்.

''என் பொண்ணை உங்கிட்டே அனுப்பிப் பணம் வாங்கற அளவுக்கு நாங்க இன்னும் தாழ்ந்து போகல்லே. இந்த மாதிரிப் பேச்சையெல்லாம் வேறே இடத்திலே வச்சுக்க. இனிமே இது மாதிரி பேசினே... அப்புறம் தெரியும்?''

எனக்கு எச்சரிக்கை நோட்டீஸ் கொடுத்து விட்டாள்.

நான் வாயடைத்துப் போனேன்.

# ராபின் ப்ளூ உலகத்தில் மிக எராளமாக விற்பனையாகும் நீலம்

உலகம் முழுதும் சுத்தமான அல்ட்ரா மரைன் ப்ளூ என்றும், வெண்மை தருவதில் பிரபலமானது என்றும் புகழ்பெற்றது. ராபின் அசல் ப்ளூ ஆனபடியால் உங்களுக்கு இயற்கையில் கவர்ச்சியான வெண்மை தருகிறது. அத்துடன் ஒரு பாக்கெட் பல சலவைகளுக்கும் பயன்படுகிறது. மேலும் ராபின் ப்ளூ துணிகளை கெடுக்காது என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

போலிகள் ஜாக்கிரதை. அசல் ராபின் ப்ளூவையே வற்புறுத்திக்கேளுங்கள்.






ராபின் ப்ளூ உங்கள் துணிகளுக்கு இயற்கையில் கவர்ச்சிகரமான வெண்மையை சேர்க்கிறது



ARBC-29 TAM

# நெஞ்சில் இடம் கொண்டவன்

'கஜமுகன்'

**பா**லகோபால் அலுவலகத்திலிருந்து ஆவலோடு வீட்டுக்கு வந்தபோது அங்கு பூட்டிய கதவுகள்தாம் அவனை வரவேற்றன. அது ஒரு தனி வீடு. உத்சாக மெல்லாம் வடிந்து தன்னிடமிருந்த இன்னொரு சாவியைக் கொண்டு பூட்டைத் திறந்து உள்ளே சென்று சோபாவில் சாய்ந்தான். அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தான். காலணியைக் கழற்றிவிட்டு விருக்கென்று எழுந்து சமையலறையை நோக்கி நடந்தான்.

காஸ் அடுப்பின் மீது உப்புமாவும், பக்கத்தில் பிளாஸ்கில் காப்பியும் வைக்கப்பட்டிருந்தன. அவனுக்கு நல்ல பசி. கையைச் சுத்தம் செய்து கொண்டு உப்புமாவைச் சாப்பிட்டுக் காப்பியைக் குடித்தான். பிறகு முன் அறைக்கு வந்தான். மேஜையின்மீது ஒரு கடிதம் தென்பட்டது.

''பாலுவுக்கு,

பூட்டிய கதவைப் பார்த்துக் கோபமடையாதே. எனக்கு அவசரமாய் ஓரிடத்துக்குப் போக வேண்டி வந்து விட்டது. உனக்கு டிபன் செய்து வைத்துவிட்டேன். இரவு மோர் சாதம் சாப்பிட்டுக் கொள். நான் நாளைக் காலையில்தான் வருவேன். சிரமத்துக்கு மன்னிக்கவும்.

அன்புள்ள

மணி

ஒரு நாளும் இல்லாத திருநாளாக இது என்ன புதிய வழக்கமாக இருக்கிறதே என்று பாலகோபால் வியப்புற்றுச் சிந்தனையிலாழ்ந்தான்.

பாலகோபால் அன்று நிர்மலா



வைப் பெண் பார்க்கப் போவதாக நிச்சயித்து விரைவிலேயே வீட்டுக்கு வந்து விட்டான். மணியிடம் பெண் பார்க்கப் போவதாகச் சொல்லவில்லை என்றாலும் ஓர் இடத்துக்குத் தான் செல்லப்போவதாக மட்டும் சொல்லி யிருந்தான். பெண் பார்க்க அவனையும் அழைத்துச் சென்று திடீரென்று வியப்பில் ஆழ்த்த வேண்டுமென்று எண்ணியிருந்தான். அவனிடம் முன்கூட்டியே சொல்லாதது தவறு என்று தோன்றியது. மணி இல்லாமல் அவன் எங்கும் போக மாட்டான். மணிக்குப் பாலகோபாலும், பாலகோபாலுக்கு மணியும்தான் துணை. இருவரும் இப்போது அநாதைகள் மாதிரி தான். சமூக நிலையில் இருவருக்கும் வேறுபாடுகள் உண்டே தவிர அவர்களது உறவில் ஏற்றத் தாழ்வே கிடையாது. பாலகோபால் படித்து நல்ல வேலையில் இருப்பவன். அவன் இருக்கும் வீடு அவனுக்குச் சொந்தமானது தான். மணி அவன் வீட்டில் சமையல் வேலை செய்த அம்மாளின் பையன். இருவருக்கும் வயது வித்தியாசம் கிடையாது. இருவரும் ஒன்றாகவே வளர்ந்தவர்கள். ஒன்றாகவே சில காலம் படித்தவர்கள். மணி படிப்பு வரவில்லை என்று விட்டு விட்டான். அதனால் அவன் வீட்டிலேயே வேலை செய்து கொண்டு குடும்பத்துடன் ஒட்டிக் கொண்டிருந்தான்.

பாலகோபால் மணியை ஒருபோதும் தனக்குச் சமதையற்றவனாகக் கருதியது கிடையாது. தன் உடன் பிறந்த சகோதரன் போலவே பாவித்துத் தோழமை பூண்டு வந்தான். பாலகோபால் எவ்வளவுதான் அன்பைக் கொட்டிப் பழகினாலும் மணி தன் நிலையை மறந்து நடந்து கொண்டது கிடையாது. அவனுக்கு அவன் தாயார் அடிக்கடி சொன்ன புத்திமதி இதுதான்: ''மணி! பாலு தங்கமான பிள்ளை. நீ அவனுக்கு ஒரு நாளும் துரோகம் செய்யக் கூடாது. உன்னை அவன் தனக்கு ஈடாகவே நினைக்கிறான். அதனால் நீயும் அவனைச் சமமாக நினைக்கக் கூடாது. அவனைப்போல் நீ படித்து முன்னுக்கு வந்திருந்தால் ஒருவேளை அந்தச் சம நிலையை எட்டியிருக்கலாம். அதற்கும் உனக்குத் 'துப்பு' இல்லாமல் போய்விட்டது. பணத்திலும் பவிஷிலும் உயர்ந்தவனோடு சம உரிமை கொண்டாடாதே!''

தாயாரின் இம் மொழிகள் மணியைப் பாலகோபாலிடம் எஜமானனுக்குரிய பயத்துடனேயே நடந்து கொள்ளும்படி செய்து விட்டன. ஆனால் மணியின் இந்தத் தாழ்வு மனப்போக்கைப் பாலகோபால் பொருட்படுத்தவே மாட்டான். அவனை இழுத்து இழுத்து வைத்துப் பேசுவான்; விளையாடுவான். தனக்கு எது வாங்கினாலும் மணிக்கும் வாங்குவான். பாலகோபாலின் அன்பும் பரிவும் மணியை அவனிடம் மேலும் மேலும் அடிமையாக்கின. அவன் மனம் நோகக் கூடாதே என்று அவனுக்குச் சமதையாகப் பேசிச் சிரித்து நடிப்பான். பாலகோபால் அவன் பெற்றோருக்கு ஒரே பிள்ளையாதலால் அவன் விருப்பமே அவர்கள் விருப்பமாக இருந்தது. அதனால் மணியுடன் அவன் சம உரிமையுடன் பழகுவதை அவர்கள் ஆட்சேபிக்கவில்லை.

பால கோபால் படிப்பு முடிந்து உத்தியோகத்துக்குப் போக ஆரம்பித்தான். மணி வீட்டுக் காரியங்களைப் பார்ப்பதும் பாலகோபாலுக்குத் தோழனாக இருப்பதுமாகக் காலத்தைக் கழித்தான். அவனது தாயார் நோயுற்று இறந்துவிட்டதால் மணிக்கு அந்தப் பொறுப்பும் ஏற்பட்டது. மணி இப்போது அந்த வீட்டுச் சமையற்காரன். பாலகோபாலைப் பொறுத்தவரையில் மணி அவனது தோழன்தான்! பழையபடிதான் அவன் பழகிக்கொண்டு வந்தான்.

இந்த நிலையில் ஒரு நாள் பாலகோபாலும் ஓர் அநாதையாகி விட்டான். ரயில் விபத்து ஒன்றில் அவன் பெற்றோர்கள் உயிரிழந்து விட்டார்கள். மணி ஒருவன்தான் அவனுக்கு இப்போது உறுதுணை. இந்த அகதி நிலையில் இருவர் மனமும் மேலும் இறுகிப் பிணைந்தன. வீட்டுப் பராமரிப்புப் பொறுப்பு முழுதும் மணியின் மீது சுமந்தது. அந்த வீட்டில் பாலகோபாலும் மணியும்தான் இருந்தார்கள்.

இருவரது பிருமச்சரிய வாழ்வும் ஓரிரண்டு வருஷங்கள் நீடித்தது. பாலகோபாலுக்கு எத்தனையோ இடங்களிலிருந்து வரன்கள் வந்தன. ஆனால் அவன் மனம் இல்லறத்தில் நாட்டம் கொள்ளவில்லை. மணிகூட அவனைக் கல்யாணம் செய்து கொள் என்று வற்புறுத்தி



ளுன்: 'இன்னும் கொஞ்ச காலம் போகட்டும்' என்று நாளைக் கடத்தி வந்தான் மணி.

பாலகோபால் மணம் செய்து கொள்ளாததற்கு மணிதான் பிரதான காரணம். தன் மனைவி வந்த பிறகு மணியை அவன் சமையல்காரனுக நடத்த விரும்பவில்லை. அவன் வாழ்க்கைக்கு ஏதாவது ஒரு வழி செய்துவிட்டுத்தான் தான் மண வாழ்க்கையில் புகுவது என்று தீர்மானம் செய்திருந்தான். மணிக்கு ஏதாவது ஒரு தொழில் ஆரம்பித்துக் கொடுத்து அவனை நல்ல நிலைமைக்கு உயர்த்துவது தனது கடமை என்று கருதினுன்: நண்பர்கள் இருவரும் இது பற்றிப் பேசுவது மட்டும் கிடையாது. 'தனியாகத் தொழில் நடத்தப் போ' என்ருல் மணி தன்னைத் தவருக எடுத்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது என்று பாலகோபால் அஞ்சினுன். மணியாக ஒரு முடிவுக்கு வரும் வரை தான் ஒன்றும் சொல்வதில்லை என்று வைத்திருந்தான். மணியோ தான் என்றும் அந்த வீட்டில் சமையல் வேலை செய்து கொண்டிருந்துவிடலாம் என்று நினைத்தான். அவன் மனத்தில் உயர்வு மனப்பான்மை இருந்தால் தானே பாலகோபால் மணம் செய்து கொண்ட பிறகு சமையல்காரனுகப் பணியாற்ற முடியாது என்று நினைப்பதற்கு?

பாலகோபாலின் அலுவலகத்துக்கு அருகே 'பாரத் கபே' என்ற சிற்றுண்டிசாலை இருந்தது. பாலகோபால் சாதாரணமாக அங்குதான் சில தினங்கள் போவான். அதன் முதலாளி மிக நல்ல மனிதர். எல்லோரையும் இனிய முகத்துடன் வரவேற்றுத் தாமே நேரில் கவனிப்பார். அவருக்குப் பாலகோபாலிடம் ஓர் ஈடுபாடு. பாலகோபாலுக்கு அவருடைய பேச்சும், நேர்மையான குணமும் மிகவும் பிடித்திருந்தன. அவருடைய பெயர் முரளிதரன். அவருக்கு ஒரு பெண் உண்டு. அவள்தான் நிர்மலா.

இப்படிப் பேச்சுக் கொடுத்ததில் பாலகோபாலின் விவரத்தை முரளிதரன் அறிந்து கொண்டார். அவன் வீட்டுக்குச் சமையற் பணி செய்யும் தோழனுக்காக மணம் செய்து கொள்வதை ஒத்திப் போட்டு வருவதைக் கேட்டு 'இப்படியும் ஓர் அதிசயப் பிறவியா?' என்று ஆச்சரியம் அடைந்தார்.

அவருடைய பெண் நிர்மலாவிடம் இந்த விசித்திரப் பிள்ளையைப் பற்றி முரளிதரன் சொன்னபோது அந்தப் பெண்ணுக்குப் பாலகோபாலை உடனே சந்திக்க வேண்டுமென்று தோன்றிவிட்டது.

நிர்மலா எம். ஏ. பட்டதாரி. ஒரு கல்லூரியில் ஆசிரியையாகப் பணி ஏற்றிருந்தாள். அழகும் மிடுக்கும் நிறைந்தவள். தந்தையைப் போன்ற இனிய சுபாவம். அதனுல் எவரையும் எளிதில் கவரக்கூடிய சக்தி அவளிடம் இருந்தது.

''அப்பா! நான் அந்தப் பாலகோபாலைப் பார்க்க வேண்டும்'' என்ருள்.

''நாளைக்கு ஹோட்டலுக்கு வாயேன்'' என்று முரளிதரன் தடை ஏதும் போடாமல் சொல்லிவிட்டார். மறு நாள் பாலகோபால் பாரத் கபேக்கு வந்தபோது வழக்கமாகத் தான் அமரும் இடத்தில் ஒரு பெண் அமர்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். வேறு இடம் காலி இல்லையாதலால் அவன் அந்தப் பெண்ணின் முன்னுல்தான் உட்கார வேண்டியதாயிற்று. அவன் தயங்கித் தயங்கி உட்காருவதைப் பார்த்ததும் அந்தப் பெண், ''உட்காருங்கள். ஏன் தயங்குகிறீர்கள்?'' என்று பனிச்சென்று பேசினுள்.

''உங்களுடைய தனிமையைக் கெடுப்பானேன் என்று பார்த்தேன்'' என்ருன்;

அவள் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''ஹோட்டலுக்கு வந்துவிட்டுத் தனிமையை யாராவது நாட முடியுமா என்றுதான் சிரித்தேன்.''

''உங்களை நான் இங்கே இதுவரையில் பார்த்ததில்லையே? இன்றுதான் முதலில் வருகிறீர்களா?''

''மாலை வேளைகளில் வருவேன். இன்று காலேஜுக்கு லீவு போட்டு விட்டேன்.''

''நீங்கள் என்ன காலேஜு முதலாளியா?''

அவன் அவளை வினுக் குறியுடன் பார்த்தாள்.

''காலேஜுக்கு நீங்கள் லீவு போடுவதாக இருந்தால் ஒன்று முதலாளியாக இருக்க வேண்டும்...''

அவள் கலகலவென்று சிரித்தாள்.

''நான் ஓர் ஆசிரியை. இன்று லீவு எடுத்துக்கொண்டிருக்கிறேன்...''

''அப்படிச் சொல்லுங்கள். அடேடே ஒன்றுமே ஆர்டர் செய்யவில்லையா? என்ன சாப்பிடுகிறீர்கள்?''

''நான்...''

''பரவாயில்லை. முன் பின் தெரியாதே என்று பார்க்கிறீர்களா? முதலில் பார்க்கும் போது எல்லோரும் அப்படித்தானே!''

முரளிதரன் தன் தந்தை என்பதை அந்தப் பெண்ணும் சொல்லவில்லை. முரளிதரனும் அவளிடம் அன்னிய மனிதர்போலவே நடந்து கொண்டார்.

நிர்மலா அடிக்கடி பாலகோபாலை அந்த ஹோட்டலில் சந்திக்கத் தொடங்கினுள். இருவரும் மனம் விட்டுப் பழகிப் புரிந்து கொண்டனர்.

பாலகோபால் மணியிடம் மட்டும் நிர்மலா விஷயத்தைச் சொல்லவில்லை. நிர்மலாவைப் பெண் பார்க்கச் சம்பிரதாயப்படி போகும் போதுதான் அவனை அழைத்துச் செல்லுவது என்று முடிவு கட்டியிருந்தான். ஆனுல் மணியைப் பற்றி நிர்மலாவிடம் எல்லாம் சொல்லிவிட்டான். நிர்மலா, தான் முரளிதரன் மகள் என்பதை அவனிடம் சொல்லவில்லை. இருவரும் மணம் செய்து கொள்வது என்று முடிவு செய்து அவனை முறைப்படி பெண் பார்க்க வருமாறு நிர்மலா கேட்டுக் கொண்டாள். தன் சம்மதமே தன் தந்தையின் சம்மதமாதலால் அவனைத் தன் வீட்டுக்கு வருமாறு அழைத்தாள். பாலகோபால் மணியைக் கலந்து கொண்டு சொல்வதாகத் தெரிவித்தான்.

''நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறீர்களா ? உங்கள் நண்பர் செய்து கொள்ளப் போகிருரா ?''

''நிர்மலா எனக்கு இந்த உலகில் மணியைத் தவிர வேறு யாரும் கிடையாது. அவனிடம் எதையும் சொல்லாமல் நான் எதுவும் செய்வது கிடையாது. உன்னைச் சந்தித்து உன்னுடன் பழகுவதை மட்டும் நான் என்

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்




( Estd. : 6-1-1947 )

பதிவுசெய்யப்பட்ட அலுவலகம் :
திருநெல்வேலி - 6 போன் : 274

மத்திய அலுவலகமும்,
முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும் :
61 - B, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை -17
P. B. 1422 போன் : 444532

## வரவு செலவு புள்ளி - பாருங்கள் - நம்புங்கள்

பாதுகாப்பான சேமிப்பு, சிட்டுகள், முதலீடுகளுக்கு விபரங்களுக்கு அணுகுங்கள்

பிரதி மாதம் ரூ. 500/- முதல் ரூ. 25,000/- வரை சிட்டுகள்
எல்லா கிளைகளிலும் சேர்ந்து, ஆரம்பித்து நடத்தப்படுகிறது

31-3-1968 நிலைமை ( ஆடிட்டுக்குட்பட்டது )
அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம் மொத்த ஆஸ்திகள் 1.52 கோடிகள்
சிட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 3 கோடிகள்

26 கிளைகள் தென்னகம் முழுவதும்

| ஆஸ்திகள் | | பொறுப்புகள் | |
|---|---|---|---|
| நிரந்தர ஆஸ்திகள் | ரூ. 2,91,125 | செலுத்தப்பட்ட மூலதனம் ரிசர்வ் நிதி | ரூ. 1,31.335 |
| முதலீடுகள், பங்குகள் அரசாங்க செக்யூரிட்டிகள் | ரூ. 14,893 | பிக்சட் டிபாசிட் | ரூ. 3,42,575 |
| கடன், முன் பணம் ஆகியவை | ரூ. 9,88 364 | பிக்சட் பங்குதாரர்களிடமிருந்து | ரூ. 2,75,050 |
| பாங்கியில் இருப்பு, ஸ்டாம்புகள் | ரூ. 20,62,873 | காரண்டி செய்த லோன் | ரூ. 10,33,474 |
| சிட்டுகள் இதர ஆஸ்திகள் | ரூ. 118,59,843 | தற்காலிக கடன் | ரூ. 1,15,991 |
| | | சிட்டுகள் இதர பொறுப்புகள் | ரூ. 133,18,673 |
| | ரூ. 1,52,17,098 | | ரூ. 1,52,17,098 |

## சென்னை சிட்பண்ட் ஆக்ட் அமுலில் உள்ள இடங்கள்

( தொழிலில் 3-ல் ஒரு பங்கு மேற்படி ஆக்டுப்படி நடக்கிறது )

| கிளைகள் | சிட்டில் ஈடுபடுத்திய தொகை | சிட்டு செக்யூரிட்டி டிபாசிட் (செக்ஷன் 12-ல் உள்ளபடி செலுத்தப்பட்டவை) |
|---|---|---|
| திருநெல்வேலி | ரூ. 26,18,425 | ரூ. 93,462 |
| தூத்துக்குடி | ரூ. 16,36,500 | ரூ. 62,000 |
| நாகர்கோயில் | ரூ. 7,59,500 | ரூ. 25,150 |
| சென்னை டவுன் | ரூ. 19,98,000 | ரூ. 92,250 |
| தி. நகர் | ரூ. 19,27,000 | ரூ. 93,250 |
| புரசைவாக்கம் | ரூ. 87,000 | ரூ. 10,250 |
| | ரூ. 90,26,425 | ரூ. 3,76,362 |

சிட்பண்ட் ஆக்ட் அமுலில் இல்லாத இடங்கள் ஈடுபடுத்திய தொகை
ரூ. 2,14,19,169

இதர செக்யூரிட்டி ஆஸ்திகள்
ரூ. 1,48,40,736

K. A. ராம், பி.ஏ., பி.எல்.,
சென்ட்ரல் ஆபீஸ் மானேஜர்

A. R. ராமசாமி
மானேஜிங் டைரக்டர்

Paramount

கோடுபோட்ட மற்றும் கட்டம் போட்டப்பெண்கள் சூட்டிங்.*
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த பாப்லின்களும்,
டாப்பி பாப்லின்களும்.
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த
பிரிண்டெட் லான்கள், பிரிண்டெட்
வாயில்கள்.
கண்கவர் டிஸைன்களில் 2x2
ஃபுல் வாயில்கள்,
புட்டாக்கள் மற்றும் புடவைகள்
ஜாப்ரிக்மைன் வேஷ்டிகள்
காப்டின் கோட்டிங்.

அழகுத் தேவதையோ
என வியக்கத்தக்க

இந்த ஆரணங்கு அணிந்திருப்பது

# ராய்ப் பூர்

தரத்தில் சிறந்த துணிவகைகள்

ராய்ப்பூர் மில்ஸ், அகமதாபாத்






SANFORIZED

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய படேல் & கோ, 5, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட், கண்டராக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.

ளவோ சொல்லாமல் இருந்து விட்டேன். அதுவே என் மனசாட்சியை அறுத்து வருகிறது. பெண் பார்க்க அவனுடன்தான் வருவேன். அவன் சம்மதித்தால்தான் நமது மணமும் நடைபெறும்.''

நிர்மலாவுக்கு அவனுடைய பதில் முகத்தில் அடித்தாற்போல் ஆகிவிட்டது. தன்னிடம் பழகத் தொடங்கியதிலிருந்து அவன் தன் நண்பனுக்கு இரண்டாவது இடம்தான் அளித்திருப்பான் என்று மனத்தில் நினைத்துக் கர்வப்பட்டுக் கொண்டிருந்தவளுக்கு இந்தப் பேச்சு சற்று அதிர்ச்சியைக் கொடுத்தது. இருந்தாலும் அவனுடைய நட்பின் ஆழத்தை அவள் நன்கு அறிந்தவளாதலால் ஒரு சிரிப்புடன், ''அப்படியானால் உங்கள் நண்பர் என்னை வேண்டாமென்று சொல்லி விட்டால் மணக்கமாட்டீர்களோ ?'' என்று கேட்டாள்.

''அதுதான் சொன்னேனே! அவன் சம்மதம் இன்றி எதுவும் நடக்காது என்று ?''

''அவரிடம் தெரிவிக்காமல் என்னுடன் பழக்கத்தை ஏன் நீங்கள் வளர்த்துக் கொண்டீர்கள் ?''

''கூடாதுதான். ஒரு பெண்ணின் பழக்கத்தில் புதுமை இருந்தது. அதுவும் ஒரு கல்லூரிப் பேராசிரியையின் அறிவார்ந்த உரையாடல் மனத்துக்கு இனித்தது. அறிவுக்கு விருந்தாயிற்று. அது உள்ளத்தையும் பிணைத்துவிடும் என்பது இப்போதுதான் புரிந்தது. பிணைப்பு இறுகுவதற்குமுன் விழிப்பு ஏற்பட்டு விட்டது. என் உடன்பிறந்தவன் போன்ற நண்பனுக்கு வழி செய்யாமல் நான் எந்தவித பந்தத்திலும் ஈடுபடுவதில்லை என்று உறுதி எடுத்துக் கொண்டது நினைவுக்கு வந்தது.''

''சரி! உங்கள் நண்பரிடம் சொல்லி அவரையும் அழைத்துக் கொண்டு நாளை மாலை வாருங்கள். அவர் சம்மதம் தராவிட்டால் பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று நிர்மலா கூறியதற்கு இணங்கினான்.

அதன்படியே மணியிடம் மறுநாள் மாலை, ''ஓரிடத்துக்குப் போகவேண்டும். தயாராய் இரு'' என்று சொன்னான்.

ஆனால் மணியை இப்போது காணவில்லையே ? என்ன செய்வது என்று தவித்தான். மணி ஆறாகி விட்டது. ஏழு மணிக்கு நிர்மலாவிடம் வருவதாகச் சொல்லியிருந்தான். மணியிடம் விஷயத்தைச் சொல்லியிருந்தால் இப்படிப் போயிருக்கமாட்டான் என்று தோன்றியது. மணி இல்லாமல் தான் போவதில்லை என்று முடிவுக்கு வந்துவிட்டான். 'நாளை நிர்மலாவிடம் சொல்லிக் கொள்ளலாம்' என்று தன் உடைகளைக் கழற்றிவிட்டு வீட்டு உடைகளை அணிந்து கொண்டான். ரேடியோவைத் திருப்பினான்.

**மா**லை கீதம் என்ற வரிசையில் இனிமையான மெல்லிசைப் பாடல்களை ஒலிபரப்பிக் கொண்டிருந்தார்கள். பிறகு செய்திகள், கிராம நிகழ்ச்சி என்று தொடர்ந்து போய்க் கொண்டிருந்தன. பாலகோபால் மனமும் எங்கெங்கோ வட்டமிட்டுக் கொண்டிருந்தது. நிர்மலாவுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியவில்லையே என்ற ஏக்கம் தோன்றியது. அவள் தன் வீட்டாரிடம்



''அப்பா! இங்கே யாரோ வந்திருக்கா. யாருன்னு கேட்டுத் தருந்த பதில் சொல்லி அனுப்பி வைக்கட்டுமா ?.....?''

சொல்லி எல்லா ஏற்பாடும் செய்திருப்பாளோ ? அவர்கள் தன்னைப் பற்றி மதிப்புக் குறைவாக நினைத்து விட்டால் என்ன செய்வது என்று கலங்கினான். சம்பிரதாயமாக எதுவும் நடைபெறவில்லை. பெண்ணின் தகப்பனாரோடு தனக்குத் தொடர்பு கிடையாது ; அவர் தன்னைக் கூப்பிடவும் இல்லை. அதனால், தான் போகாதது அவ்வளவு பெரிய தவறாகாது என்று சமாதானப்படுத்திக் கொண்டான்.

''மணி எங்கே போயிருப்பான் ? அவன் இப்படிப் போனதே கிடையாதே ! இரவு வெளியில் தங்கினதும் கிடையாதே !'' என்று மணியைப் பற்றிப் பலவிதமாக எண்ணித் தவித்தான்.

மணி எட்டு அடித்தது. வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

''சார் !''

''யாரது ?''

''நான்தான் 'பாரத் கப்ப' முரளிதரன்.''

பாலகோபால் பரபரப்புடன் கதவைத் திறந்தான்.

''வாருங்கள். என்ன இப்படித் திடீரென்று ? என் வீடு எப்படித் தெரிந்தது உங்களுக்கு ?''

'' நிர்மலாவிடம் விசாரித்தேன். வந்தேன்.''

'' ஓ ! அப்படியா ? சந்தோஷம். உட்காருங்கள்.''

''ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள் ? வழக்கமான உத்சாகத்தைக் காணவில்லையே முகத்தில் ?'' என்று கூறி முரளிதரன் அவன் முகத்தை உற்றுப் பார்த்தார்.

''ஒன்றுமில்லையே. ஆபீஸில் வேலை செய்த களைப்பு. அவ்வளவுதான் !''

''உம். எங்கே உங்கள் நண்பரைக் காணவில்லை ?''

''மணியா? அவனைப் பற்றித்தான் நானும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். வழக்க

மில்லாத வழக்கமாக இன்று எங்கேயோர் வேலை இருக்கிறது என்று சொல்லி எழுதி வைத்துவிட்டுப் போய்விட்டான். இந்த வீட்டைத் தவிர அவனுக்கு வேறு ஜோலி இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. என்னிடம் மறைக்கக்கூடிய எதுவும் அவனுக்குக் கிடையாது. அதுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

''காலம் மாறுவது போல் மனிதர்கள் மனமும் மாறித்தானே வருகிறது? உங்களிடம் சொல்ல முடியாத அவசரம் ஏதாவது வந்திருக்கும். போயிருப்பார். நான்கூட அவர் விஷயமாகத்தான் வந்தேன்.....''

பாலகோபால் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

''நீங்கள் அடிக்கடி சொல்வீர்களே, மணிக்கு ஒரு தொழில் ஆரம்பித்துக் கொடுக்க வேண்டுமென்று. அது பற்றிப் பேசத்தான் வந்தேன். எனக்கு மதுராந்தகத்தில் ஒரு தங்கை இருக்கிறாள். அவளுக்கு ஒரு பெண் — சரஸ்வதி என்று பெயர் உண்டு. என் தங்கைக்குப் புருஷத் துணை இல்லை. உங்களுக்குச் சம்மதமானால் மணியை என் தங்கை பெண்ணுக்குக் கொடுக்கலாம். அத்துடன் மணிக்கு மதுராந்தகத்திலேயே ஒரு சிறு ஹோட்டல் வைத்துத் தருகிறேன்.''

முரளிதரனுடைய இந்தத் திடீர் யோசனை பாலகோபாலுக்கு ஒரு பெரிய பிரச்னையைத் தீர்த்துவிட்டது போன்ற ஆறுதலை யளித்தது. சோர்வுற்றிருந்த அவன் முகம் பளிச்சென்று ஒளி பாய்ந்தது போலாயிற்று. அவருடைய கைகளைப் பிடித்துக் கொண்டு குலுக்கினான்.

''நாளை மணி வரட்டும், கேட்டுச் சொல்கிறேன். உங்களுடைய உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான்.

முரளிதரன் அவனுடைய தோழமையின் ஆழத்தைக் கண்டு நெகிழ்ந்து போனார்.

மறுநாள் காலை மணி வந்துவிட்டான். பாலகோபால் அவனிடம், ''எங்கேடா போனாய் அவ்வளவு அவசரமாய்?'' என்று கேட்டான்.

''மன்னித்துக் கொள், பாலு. மதுராந்தகத்திலிருந்து நேற்று ஒரு கடிதம் வந்தது.''

பாலகோபால் திடுக்குற்றான்.

''என்னடா, உளறுகிறாய்? மதுராந்தகத்திலே உனக்கு யாரடா இருக்கிறார்கள்?''

''அப்படித்தான் நானும் நேற்று வரை நினைத்தேன். என் அம்மாவுக்கு மாமா பெண்ணாம், என்னை உடனே வா என்று ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அவளுக்கு நான் எப்படி இங்கிருக்கிறேன் என்று தெரிந்ததோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். உன்னிடம் சொல்லிவிட்டுத்தான் போக வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் அதற்குள் நேற்று மத்தியானம் ஒரு பெண் என்னைத் தேடிக் கொண்டு வந்தாள்.''

''உம்.சுவாரசியமாகத்தான் இருக்கிறது.''

''வந்தாளா? நீங்கள்தானே மணி என்றானே, பார்க்கலாம்.''

''நீ ரொம்பப் பிரபலமாயிட்டே போல் இருக்கிறது!''

''கேளு. அடியேன்தான் என்று சொன்னேன். 'பாலகோபால் குடியும் குடித்தனமுமாக வாழ உங்களுக்கு விருப்பமுண்டா இல்லையா?' என்று ஒரு கேள்வி போட்டதும் நான் அரண்டுவிட்டேன்.''

'' 'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்றேன். 'உங்களுக்குச் சம்மதமில்லையானால் அவர் யாரையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டாராமே. உங்களுக்கு ஒரு வழி செய்த பிறகுதான் நான் மணம் செய்து கொள்வேன் என்கிறார். இது என்ன நியாயம்?' என்றாள். நான் வெலவெலத்துப் போனேன். இப்படியொரு பிரதிக்ஞை நீ எடுத்துக் கொண்டிருக்கிறாய் என்பது அப்போதுதான் தெரிந்தது. ஒரு சமையற்காரனுக்காகத் தன் வாழ்வின் இனிமையைக் கெடுத்துக் கொள்வதா என்று உன் மீது கோபம் வந்தது. உனக்குக் கல்யாணம் ஆன பிறகு என்னைச் சமையற்காரனாக நீ வைத்துக் கொள்ள விரும்பவில்லை என்றும் தெரிந்தது. நீ அந்தப் பெண்ணிடம் கொண்டுள்ள பழக்கத்தைக்கூட எப்படித் தெரிவிப்பது என்று தர்மசங்கடப்பட்டுக் கொண்டிருக்கிறாய் என் பதை அறிந்தபோது நான் அழுதுவிட்டேன், பாலு. நேற்று நீ என்னை அழைத்துக்கொண்டு போய்ப் பெண் பார்க்கத் திட்டமிட்டிருந்ததாக அந்தப் பெண் சொன்னாள். நான் எதுவும் எதிராகச் சொல்லிவிடப் போகிறேனோ என்று பயந்து என்னைத் தாஜாப் படுத்த அவள் வந்திருக்கிறாள். படிப்பிலும் அழகிலும் பண்பிலும் உயர்ந்த அந்த நிர்மலாவை நான் உனக்கு வேண்டாமென்று சொல்வேனா பாலு? அவளிடம் சொன்னேன்: 'கவலையே படாதீர்கள் அம்மா. பாலு உங்களுக்குத்தான் நிச்சயம்' என்று. உனக்காக நான் வாக்குக் கொடுத்துவிட்டேன் பாலு. அதைக் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு. நீ என்னைச் சரிசமனாக நடத்தினாலும் நான் அப்படி நினைக்க முடியவில்லை, பாலு. அந்தப் பெண்ணும் உன்னைப்போலவே என்னைக் கருதினாலும், அவளுடைய பெற்றோர்கள் அப்படிக் கருதுவார்கள் என்பது என்ன நிச்சயம்? அதனால் உன் மதிப்புக்கு இழுக்கு வரக்கூடாது என்பதற்காக, நான் உன்னுடன் பெண் பார்க்கப் போக வேண்டாமென்று தீர்மானித்து, மதுராந்தகக் கடித அழைப்பைப் பயன்படுத்திக் கொண்டேன்.''

பாலகோபால் ஒன்றும் பேசவில்லை. அவன் கண்களில் நீர் நிரம்பியது.

''பெண் பார்க்கப் போனாயா?''

''இல்லை.''

மணி பதறிப் போனான். ''ஏன்?''

''நீ இல்லாமல் நான் போவேன் என்று நினைத்தாயா? உனக்குப் பிறகுதான் எல்லாம் மணி. ஆனால் எனக்குக் கல்யாணமாகி விட்டால் நீ இங்கே பணியாளாக இருக்க முடியாது. என் மனைவி உன்னை அப்படி நினைக்க நான் அனுமதிக்கமாட்டேன். அதனால்தான் உன்னை ஒரு சுதந்திர மனிதனாக்கிவிட்டுத்தான் நான் மண வாழ்வில் ஈடுபட வேண்டுமென்று உறுதி கொண்டிருந்தேன். அதுவும் நிறைவேறும் சமயம் வந்துவிட்டது. நேற்று நீ போன அதே மதுராந்தகத்தில்தான் உன் சுதந்திர வாழ்வு மலரப் போகிறது. நீ உன் அம்மாவுக்கு மாமா பெண்ணைப் பார்த்தாயா?'' என்று கேட்டான் பாலகோபால்.

"பார்த்தேன்: அவளுக்கு சரஸ்வதி.....!"

"என்று ஒரு பெண் இருக்கிறாள். அவள் எப்படி இருக்கிறாள்?..உனக்குப் பிடித்திருக்கிறதா?"

"உனக்கு எப்படித் தெரியும்?"

"நேற்று உன் அம்மாவின் மாமா பெண்ணின் அண்ணா இங்கே வந்து உன்னைப் பற்றி விசாரித்தார். அவர் சொன்னார், தம் தங்கை மதுராந்தகத்தில் இருப்பதாக! சரஸ்வதியை நீ மணந்து கொண்டால் அவர் உனக்கு ஒரு ஹோட்டல் வைத்துத் தருவதாகச் சொன்னார்."

"பாலு! நீ என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் இத்தனை நாட்கள் இருந்தது போலவே இருக்கிறேன். உன் மனைவிக்கு என்னைப் பிடிக்கவில்லையானால் நான் போய் விடுகிறேன். எனக்கு ஹோட்டல் வைக்கவோ அந்த மதுராந்தகப் பெண்ணை மணக்கவோ இஷ்டமில்லை."

"ஏன் மணி?"

"அவள் என் உறவினளே அல்ல. யாரோ வேண்டுமென்றே என்னை இந்த இடத்திலிருந்து கிளப்புவதற்காக எழுதியிருக்கிறார்கள்."

பாலு திகைத்துப் போனான். முரளிதரனுடைய வேலைதான் இது என்றுபட்டது. எதற்காகத் தான் பெண் பார்க்கப் போகும் நாளில் மணியை இந்த இடத்தைவிட்டு வேறு ஊருக்குப் போகும்படி செய்ய வேண்டும்? அவன் மதுராந்தகம் போனானா என்பதைத் தெரிந்து கொள்ளத்தான் வந்தாரா? தனது கல்யாணத்தில் என்ன அக்கறை?

"மணி! இன்று மாலை நீ கட்டாயம் என்னுடன் வா. பெண் பார்க்கப் போவோம். உன்னை என்னிடமிருந்து பிரிக்கவே சதி நடந்திருந்தால் அந்தப் பெண் நமக்கு வேண்டவே வேண்டாம்."

"ஊஹூம். பாலு, நிர்மலா, உன்னிடம் உயிரை வைத்திருக்கிறாள். அவளை நீ நிராகரிப்பதை நான் விரும்பவில்லை."

"உன்னை மதிக்காத இடத்தில் எனக்குச் சம்பந்தம் தேவையில்லை. நீ என் சகோதரன். அதை ஏற்காதவர்களுக்கு இந்த வீட்டில் இடமில்லை, மணி."

அன்று மத்தியானம் பாலகோபால் பாரத்கபேக்குச் செல்லவில்லை. நிர்மலா கோபமாக டெலிபோன் செய்தாள். அவளை ஏதோ சொல்லிச் சமாதானப்படுத்திவிட்டு அன்று மாலை வருவதாகச் சொன்னான்.

மாலை மணி தயாராக இருந்தான். இருவரும் புறப்பட்டு நிர்மலாவின் வீட்டுக்குப் போனார்கள். அங்கு முரளிதரன் அவர்களை வரவேற்றபோது பாலகோபாலுக்கு எல்லாம் விளங்கிவிட்டது. நிர்மலா முரளிதரனின் மகள் என்பதும் புரிந்தது. மணி தன்னுடன் வருவதை அவர் கௌரவமாக நினைக்கவில்லை என்று தெரிந்து கொண்ட போது பாலகோபாலுக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை.

"இவன்தான் மணி" என்று முரளிதரனுக்கு அறிமுகம் செய்து வைத்த போது அவர் முகத்தில் அசடு வழிந்தது. முரளிதரன் கல்யாணப் பேச்சை எடுத்த போது பாலகோபால் சொன்னான்:



வின்ஸ்டன் சர்ச்சில் டெலிவிஷனில் "ஆலிவர் டுவிஸ்ட்" நாடகத்தைத் தம் நாயுடன் பார்த்துக் கொண்டிருந்தார். அந்நாடகத்தில் நடித்த பில்சிகஸ் என்ற நடிகர் உடன் நடிக்கும் நாயை இழுப்பது போன்ற காட்சி வந்தபோது தம் நாயின் கண்ணை மறைத்து விட்டார். "உன் கண்ணை மறைத்த காரணத்தைப் பிறகு சொல்கிறேன்!" என்றார் தம் நாயிடம்.

தகவல்: மன்னைதாஸ்

"முரளி சார்! நீங்கள் பெண்ணுக்குத் தகப்பனார் என்பதை இவ்வளவு மூடுமந்திரமாக வைத்திருக்க வேண்டியதில்லை. என்னை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள வேண்டுமென்ற கவலையில் உங்கள் பெண் என்னை முழுவதும் கவருகிற வரை உங்களை இன்னாரென்று காட்டிக் கொள்ளும் துணிச்சலை இழந்து விட்டீர்கள். அதே சமயம் என்னுடன் மணி வருவதை விரும்பாமல் அவனுக்குப் பொய் உறவுக் கடிதம் எழுதிப் பிரித்தீர்கள். நீங்களும் ஒரு காலத்தில் கரண்டி பிடித்தவர்தான். அதை நினைத்து, நான் உங்கள் உறவை வேண்டாமென்று சொல்லப் போவதில்லை. ஏனெனில், மணி இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதம் கொடுத்து விட்டான். ஆனால் நேற்றிரவு நீங்கள் சொன்ன யோசனையை அவன் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. நிர்மலாவும் சரி, நீங்களும் சரி மணியை என் சகோதரனாக ஏற்றுக் கொண்டால் நான் உங்கள் பெண்ணை மணக்கச் சம்மதிக்கிறேன்."

முரளிதரன் தமது செயலுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

மறுநாள் நிர்மலா மணியைத் தனியே சந்தித்து அவனுக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள். ஒரு பெண்ணின் வசிய சக்தியைவிட நட்புக்கு அதிக சக்தி இருப்பதை அவள் கண்டாள். மணி தங்களுடனேயே இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். திருமணம் முடிந்து நிர்மலா வீட்டுக்கு வந்த மறுநாள் மணியைக் காணவில்லை. பாலுவுக்கு மணமானாலும் தான் பழையபடி இருந்து வர விரும்பியவன் ஏன் போனான் என்பது வியப்பை அளித்தது. ஆனால் இரண்டு நாட்கள் கழித்து வந்த ஒரு கடிதம் பதில் சொல்லியது:

"நான் போனதற்கு வருந்தாதே. உன் முழு அன்பு எனக்குக் கிடைப்பதையே நான் விரும்பினேன். அதே போல் நானும் உன்னிடம் கொண்டுள்ள அன்பு முழுமையாக இருக்க வேண்டும் எனக் கருதி மதுராந்தகம் பெண்ணை வேண்டாமென்று சொல்லிவிட்டேன். நிர்மலாவுடன் நான் போட்டியிட விரும்பவில்லை. என் நெஞ்சில் என்றும் நீ நிலைத்திருப்பாய், பாலு!"

# ஓவியருக்குக் காணிக்கை

ஓவியர் மணியத்தின் உடல்நிலை சரியில்லை என்றும் அவர்களுக்கு நிதி திரட்டுவதாகவும் கல்கியில் படித்து அறிந்தேன். என்னுடன் பணிபுரியும் தொழிலாளர்களிடம் விஷயத்தைக் கூறினேன். அவர்கள் என் பேச்சுக்கிணங்கி ஒருநாள் 'பேட்டா'வைத் தர முன் வந்தார்கள். அந்தப் பணத்தை நான் அனுப்பியுள்ளேன்.

நான் ஓவியர் மணியம் தீட்டிய ஓவியங்களைக் கண்டு ரசித்துள்ளேன். அந்த ஓவியத்தைப் பார்த்து ஓவியரானவர்கள் பலரை எனக்குத் தெரியும். கல்கிப் பிரியன் நான். அதுமட்டுமல்ல. நான் ஓர் எழுத்தாளன். சிறு கதைகள் பல எழுதியுள்ளேன். எந்தப் பத்திரிகைக்கும் அனுப்பியது கிடையாது. தொழிலாள நண்பர்களிடம் நேரும் சண்டைகளைத் தீர்க்கக் கதையை எழுதிக் கொடுப்பேன். அதைப் படித்துவிட்டு, அதன்படி சமாதானமாகி விடுவார்கள். அதனால் என்னை அவர்கள் 'ஆசிரியரே' என்று அழைப்பார்கள்.

மீனாட்சிஹோட்டல் தொழிலாளர்களாகிய நாங்கள் இந்தச் சிறிய தொகையை அதாவது ஐந்து ரூபாயை அனுப்பியுள்ளோம். தயவு செய்து பெற்றுக் கொள்ளவும்.

வேலூர்
17–8–68 கே. சின்னசாமி

## மாற்றம் வேண்டும்!

இதை எழுதிக் கொண்டிருக்கும் நேரம் (இரவு 10–45) தமிழ்ப் படப் பாட்டு ரேடியோவில் கேட்கிறது. ''மகா'' மட்டரகமான பாட்டு. காதலர்கள் 'டூயட்' பாடாத படமே எடுக்க முடியாதா? படப் போக்கில் மாற்றம் ஏற்படுத்த வேண்டும் என்று ஒரு படாதிபதி யாவது நினைத்துப் பார்ப்பதுண்டா? இயற்கையாக அமைந்த காட்சிகளை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறவர்கள் மலையாள வங்காள தயாரிப்பாளர்களே. வங்காளப் படத்தில் பாட்டுக்களே அதிகம் இருக்காது. படமும் அதிக நீளம் கிடையாது. கதைக்கு நல்ல மதிப்பு உண்டு. சிக்கனமாக எடுப்பார்கள். தவிர எந்த விதத்திலும் 'அரசியல்' உள்ளே வராது.

கல்கத்தா–20
19–8–68 வி. ஏ. ராஜு

## 'கல்கி'யின் சிறப்பு

திரு அ. வெளைசலம் அவர்களது திருவுருவப்படத்தை அட்டைப்படமாகக் கண்டதும், எல்லையில்லாத மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைந்தேன். அந்தத் தொழில் மேதையின் தவப் புதல்வர், ஆற்றிய, ஆற்றுகின்ற, ஆற்றவிருக்கும் பணிகளைக் குறிப்பிட்டு விவரிக்க இரண்டு இதழ்கள் போதாதென்றாலும் அதை எழுதியிருக்கும் பாணியிலேயே ஒரு நிறைவைக் காண முடிகிறது. அதுதான் கல்கியின் சிறப்பும் கூட.

ஆள்வார் குறிச்சி
19–8–68 ரா. முத்துசாமி




## கரும்பு தின்னக் கூலியா?

''பிரபல நட்சத்திரம்'' கதைத் தொகுப்பு மிகவும் நன்றாக உள்ளது. விலை கொடுத்து வாங்கிப் படிக்க வேண்டிய இப் பொக்கிஷத்தை இலவசமாக அளித்துப் பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்களுக்கு அரும் தொண்டாற்றியுள்ள கல்கியினை எப்படிப் போற்றுவதென்றே புரியவில்லை. பேராசிரியர் கல்கி அவர்களின் பொன்னியின் செல்வனை வாரம் தவறாமல் படிக்க வாய்ப்பினையும் அளித்து, இக்கதைத் தொகுப்பினையும் வாசகர்களுக்கு அளித்ததை எண்ணிப் பார்க்கும்போது, ''கரும்பு தின்னக் கூலியா?'' என்ற பழமொழிதான் நினைவுக்கு வருகிறது.

ஹைதராபாத்
22–8–68 பி. நடராஜன்

நாங்கள் அனுப்பிய அன்பளிப்புப் புத்தகம் 'பிரபல நட்சத்திரம்' நேற்றைய தபாலில் கிடைத்தது. புத்தகத்தின் எழிலார்ந்த அமைப்பும், அதில் பூத்துக் குலுங்கிய ஏழு சிறுகதை மலர்களும், சுதந்திரத் திருநாளுக்கு மேலும் சுகந்தத்தை அள்ளி வீசின என்றால் அது மிகையாகா. எல்லையற்ற மகிழ்ச்சியால் என்ன எழுதுவதென்றே எனக்குத் தோன்றவில்லை. கல்கி தனது இலக்கியப் பணியை இடரின்றித் தொடர, இன்தமிழைப் பரப்ப, ஏற்றத்துடன் விளங்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

தஞ்சை
16–8–68 சி. ப. ஹரிஹரன்

இன்னொருதடவை 'பொன்னியின் செல்வன்' வெளியிடப்பட மாட்டாதா எனக் காத்துக்கொண்டிருந்தோமே, அந்தப் பொற்சித்திரம், அமரர் கல்கி அவர்களின் படைப்பான அமர காவியமான 'பொன்னியின் செல்வனை'த் தவற விட்டுவிடக் கூடாதே என்பதற்காகத்தான் முதலாண்டு சந்தாவை அனுப்பிக் கரும்பு தின்னக் கூலி கொடுப்பது போல் தாங்கள் அன்புடன் அனுப்பி வைத்த 'பிரபல நட்சத்திரம்' புத்தகத்தையும் மிக்க மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டோம். எங்கள் வீட்டிலேயே மூன்று சகோதரர்களும் மூன்று சந்தாத் தொகை அனுப்பியிருக்கிறோம்.

சேலம்
16–8–68 ஜி. வாசு

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon